உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# வடதிருமுல்லை வாயிலந்தாதி.

[ மூலமும் உரையும் ]



திருவாவடுதுறை ஆதீனத்து,

திராவிடமாபாடியகர்த்தராகிய

— ஸ்ரீ மாதவச்சிவஞான யோகிகள்

நந்தன — சித்திரை — ஆயிலியநாள்

1952

திருவாவடுதுறையாதீனவெளியீடு எண் — 51.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# ஸ்ரீமாதவச்சிவஞானசுவாமிகள் பிரபந்தங்கள்.

## 7. வடதிருமுல்லைவாயிலந்தாதி மூலமும் உரையும்.

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து
இருபத்தொராவது குருமஹாசந்நிதானம்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகசுவாமிகள்**
கட்டளையிட்டருளியபடி

அவ்வாதீன வித்துவான்
த. ச. மீனாட்சிசுந்தரம்பிள்ளையால்
பரிசோதித்துப் பதிப்பிக்கப்பெற்றது.

நந்தன — சித்திரை — ஆயிலியநாள்

1952

உ

சிவமயம்

# சிறப்புப்பாயிரம்.

பொருட்டுறை மலிந்த முல்லையங் காதி
புலவர்கட் கமிழ்தெனப் பொழிந்த
தருட்டுறை யடியர் நிதியமாய்ப் போந்த
வண்ணன்மெய் கண்டமா தேவன்
மருட்டுறை யொழிப்பான் வார்த்திகப் பொழிப்பான்
வகுசிவ ஞானபோ தத்தின்
தெருட்டுறை பிறங்கப் பாடிய முறையிற்
செய்சிவ ஞானவான் முகிலே.



இருபத்தோராவது குருமஹா சந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# முகவுரை.

—o—

வடதிருமுல்லைவாயிலந்தாதி என்னும் இப்பிரபந்தம் நந்தன – சித்திரை – ஆயிலியநாளாகிய இன்று (2–5–52) வெளிவருகிறது. இதனை அருளியவர்கள் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்துத் திராவிடமாபாடிய கர்த்தராகிய ஸ்ரீமாதவச் சிவஞானயோகிகள் ஆவார்கள். இவர்கள் சிவபரிபூரணமுற்ற திருநட்சத்திரம் சித்திரை — ஆயிலியம். ஆயிலிய நாளைச் சித்தாந்தசைவர்களும், செந்தமிழ்ப் புலவர் பெருமக்களும் ஒருசேரத் திரண்டு திரண்டு செந்தமிழ் நாடெங்கும் திருவிழாவெடுத்துக் கொண்டாட வேண்டும். இம்முனிவர்பிரான் நம் தமிழகத்துக்குச் செய்த அருளிச் செயல்கட்கு அளவில்லை. இலக்கணம்–இலக்கியம்–தருக்கம்–மொழிபெயர்ப்பு–மறுப்புக்கள்–சிற்றுரை பேருரை வரைதல் ஆகிய எல்லாத் துறைகளிலும் இவர்களுக்கு வாய்த்திருந்த திருவருட்பெருக்கு வேறெவருக்கும் வாய்த்திலது. துறவுக்குப் பேரரசர்: இவர்கள் மாணவர் பன்னிருவரும் அத்தகையவர்களே. தமிழ்நாடு முழுவதிலும் இருந்து இன்று தமிழ் மொழியரசு செலுத்தும் புலவர் பெருமக்கள் அனைவரும் இவர்கள் மாணவர் வழிவந்த மாணவர் பரம்பரை எனின் அது மிகையாகாது. தமிழ்ப் புலவர்கள் தாம் பாடங்

கேட்டுவந்த ஆசிரியர் பரம்பரையைத் தொட்டுக்கொண்டே சென்றால் ஸ்ரீமாதவச்சிவஞானயோகிகள் திருவடியிலேதான் அப்பரம்பரைசென்று நிலைபெறும். அது இவ்வாதீனத்துக்கு இயல்பாகக் கிடைத்துள்ள திருவருட் செல்வம். இத் திருவருட்செல்வம் என்றென்றும் நிலைபெறுவதற்கு ஆவன இவ்வாதீனத்தில் நிலையாகவே அமைந்துள்ளன.

இனி, இவ்வாதீனத்துப் பதினாறாவது குருமகாசந்நி தானம் ஆகிய மேலகரம் ஸ்ரீ சுப்பிரமணியதேசிகமூர்த்திகள் காலத்து இவ்வாதீனத்தில் மெய்கண்ட சித்தாந்த சாஸ் திரங்களையும், இலக்கண இலக்கிய நூல்களையும் முறையாகக் கற்று வல்லவர்களாகிய மதுரை-இராமசாமிபிள்ளை என வழங்கும் ஞானசம்பந்தப்பிள்ளை என்பவர்கள் ஸ்ரீமாதவச் சிவஞானயோகிகள் அருளிச்செய்த பிரபந்தங்களையெல்லாம் தொகுத்துப் பிரபந்தத் திரட்டாக இரண்டு தடவை அச்சிட் டார்கள். ஆயினும், இப்பிரபந்தத் திரட்டுக் கிடைப்பதரி தாயிற்று. ஆகலின், விக்ருதி–சித்திரை–ஆயிலியநாளில் கச்சி ஆனந்தருத்திரேசர் பதிகம், திருத்தொண்டர் திருநாமக்கோவை, திருவேகம்பர் ஆனந்தக்களிப்பு, சுலோகபஞ்சக மொழி பெயர்ப்பு முதலியன குறிப்புரையுடனும், பஞ்சாக்கரதேசிகர் மாலை பதவுரையுடனும் ஆக ஐந்து பிரபந்தங்கள் வெளிவந்தன. கர–சித்திரை–ஆயிலியநாளில் 6. கலைசைப்பதிற்றுப்பத்தந்தாதி குறிப்புரையுடன் வெளிவந்தது. இன்று ஏழாவதாக இவ்வட திருமுல்லைவாயிலந்தாதி பதவுரையுடன் வெளிவருகிறது.

மேலேகண்ட ஆறு பிரபந்தங்களும், ஸ்ரீசுவாமிகள் குருபூஜை நாளன்று அவர்கள் அவதரித்த விக்கிரமசிங்கபுரத் திலே சைவப் பிரபுக்களும், சித்தாந்த சைவர்களும், செந்

தமிழ்ப் புலவர்பெருமக்களும் ஒருங்குகூடி “சிரிப்பார் களிப்பார் தேனிப்பார் திரண்டு திரண்டுன் திருவார்த்தை, விரிப்பார் கேட்பார் மெச்சுவார் வெவ்வேறிருந்துன் திருநாமம், தரிப்பார் பொன்னம்பலத்தாடும் தலைவா என்பார்” ஆக இருக்குங்காலத்திலே ஒவ்வொரு ஆண்டிலும் கிடைக்கப் பெற்றன. ஸ்ரீசுவாமிகள் சிவபரிபூரணமான திருவாவடுதுறையிலே இந்த ஆண்டிலே இவ்வந்தாதி பதவுரையுடன் 21-வது குருமகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகமூர்த்திகள் கருணைப் பெருக்கால் வெளிவருவது மிகவும் போற்றுதற் குரியது. சிவராசதானியாகிய திருவாவடுதுறையிலே சித்தாந்த சைவர்களும், பிரபுக்களும், இவ்வாதீன முனிபுங்கவர்களும், வித்துவப் பெரியோர்களும் கூடிய மகாசபையில் இன்று சிவஞானப்பெருக்காக—வெள்ளமாக—வெளிப்படுவது நாமெல்லாம் பண்ணிய சிவபுண்ணியமேயாம். ஸ்ரீபஞ்சாக்கர பரமாசாரியருடைய திருவருள் வெள்ளத்திலே சுவாமிகள் திளைத்து அருளிய நூல்களும் — உரைகளும் — படிப்படியாகக் காலமுண்டாகவே கையில் கிடைக்கின்றன. அறிவிற் சிறியேன் இப்பதிப்பிலும் அறியாது செய்த பிழைகளைப் பொறுத்தருளுமாறு பெரியோர்களை வேண்டிக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இவர்கள் பிரபந்தங்களைப்பற்றிய ஆராய்ச்சி தனியே வெளிவரும்.

இங்ஙனம்,

திருவாவடுதுறை 2—5—52. } த. ச மீனாட்சிசுந்தரம்பிள்ளை, ஆதீனவித்துவான்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

கலைதேர் நமச்சி வாயகுரு
கருணைக் கடலில் திளைத்தாடிக்
கலகப் பாசத் தொடரறுத்துக்
காமத் தறியை அறவீழ்த்தி

அலையுஞ் சமயத் தருக்களைக்கீழ்
அடிவே ரோடும் அகழ்ந்தெறிந்திட்(டு)
அருளின் படாத்தை முகமேற்கொண்(டு)
ஆதி வேதா கமங்களெனும்

தொலையா மணிகள் இருமருங்கும்
தொனிக்கச் சைவ மதம்பொழிந்து
துங்க மோடும் உலகமுற்றும்
சுற்றும் வெற்றி வாரணமே

மலையா தருளு முனிவர்சிகா
மணியே வருக வருகவே
வளமார் துறைசைச் சிவஞான
வள்ளால் வருக வருகவே.

ஸ்ரீ பாண்டித்துரைத் தேவர்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# வட திருமுல்லைவாயிலந்தாதி

## மூலமும் உரையும்.



### காப்பு.

மல்லை விநாயக னிந்தெம்மை யாளொற்றி வைபுகல்வே
றில்லை விநாயக னன்கேனு மில்லலென் றிகழலெனுஞ்
சொல்லை விநாயக னைந்திரப் போர்க்கருள் சோதிபெற்ற
முல்லை விநாயகன் முல்லையந் தாதிக்கு முன்னிற்குமே.

(பதவுரை) மல்லை வில் நாய—மேருமலையை வில்லாக உடைய முதல்வரே, கனிந்து—திருவுளம் இரங்கி, எம்மை ஆள்—அடியேங்களை அடிமை பூண்டருளும், ஒற்றி வை—(பூண்டு) ஒற்றிசெய்தருளும், வில்—(அல்லது) விற்றருளும், வேறு புகல் இல்லை—பிறிது பற்றுக்கோடு இன்று, நாய் அகன்—நாயிடத்துள்ள, நன்கு ஏனும் இல் என்று—நன்மையாயினும் இல்லையே என, இகழல்—இகழாதிரும், எனும் சொல்லை விநய்—என்று புகழ்கின்ற விண்ணப்பத்தைக் கேட்டருளி, அகன் கைந்து—மனம் உருகி, இரப்போர்க்கு அருள்—யாசிக்கின்ற—(அத்) திரு அடியார்களுக்குக் கருணை செய்யும்,

சோதி பெற்ற—சிவபிரான்' தந்தருளிய, முல்லை விநாய கன்—முல்லை விநாயக மூர்த்தியானவர், முல்லை அந்தா திக்கு—(யான் பாடத் தொடங்கிய) திருமுல்லை வாயிலந் தாதி என்னும் பிரபந்தத்துக்கு, முன் நிற்கும் — (வரும் இடையூற்றைப் போக்கி) முன் நின்றருளும் (எ—று)

மலை என்பது மல்லை என ஓர்ஒற்று விரிந்து நின்றது எதுகை நோக்கி. மூன்றும் அடியில் விநாய் என்பது கேட்டென்னும் பொருளில் வந்தது. ஏகாரம்—ஈற்றசை.

நூல்.

திருத்தங்கு மாமுல்லை வாயிற் பிரானிரு சேவடிநீர்த்
திருத்தங்கு மார்க்கத்திற் செல்லாம லாடப்பெற் றேமினிமால்
திருத்தங்கு மாரனென் றோதிப் பிறரைப்பின் சென்றுநின்று
திருத்தங்கு மாது முனிந்தாலு நைந்துளந் தேம்பிலமே.

(பதவுரை) திரு தங்கு—அழகு தங்கிய, மா முல்லை வாயில் பிரான்—பெரிய திரு முல்லை வாயிலின் கண் எழுந்தருளியிருக்கின்ற கடவுளாகிய சிவபிரானு டைய, இரு சே அடி—சிவந்த இரண்டு திருவடிகளில் (அபிடேகிக்கப்படும்), நீர் திருத்தம்—திவ்விய தீர்த்தத் திலே, கு மார்க்கத்தில் செல்லாமல்—கீழ்மையாகிய வழி யில் ஒழுகா வண்ணம், ஆடப் பெற்றேம்—மூழ்கப் பெற் றேம் (ஆதலால்), இனி பிறரை—இனி (உலகத்தை யாளும் அரசராகிய) அயலோரை, மால் திரு தம் குமாரன் என்று—விஷ்ணுவுக்கும், இலக்குமிக்கும் புத்திரன் ஆகிய மன்மதன் என்று, ஓதி—புகழ்ந்து, பின்

*சென்று நின்று—பின்னே போய் நின்று, திருத்தம்—சீர்ப் படுத்தமாட்டோம், கு மாது முனிந்தாலும்—(அங்ஙனம் புகழாமை பற்றி) பூமாது கோபித்த விடத்தும், உளம் நைந்து தேம்பிலம்—மனம் வருந்தித் தளரமாட்டோம் (எ-று)*

*இருசே அடி நீர்த் திருத்தம் என்பதற்கு நிருமல மாகிய பேரருட்சத்தி (பதிந்த) தீர்த்தத்தில் எனினும் அமையும். மூன்றாமடியில் தம் சாரியை.* (1)

தேங்கொன்றை யாரண வுஞ்சடை
 வாழ்வைத் திசையனைத்துந்
தேங்கொன்றை யாரண வல்லா
 ரெமைச்சினஞ் செய்துபோறி
தாங்கொன்றை யாரணஞ் செய்யாது
 முல்லைத் தலத்திறைவா
தாங்கொன்றை யாரண வேன்றிரந்
 தேத்துந் தவம்பெறினே.

*(பதவுரை) தேம் கொன்றை ஆர் அணவும—தேன் பொருந்திய கொன்றை மலரும் ஆத்திமலரும் அணிந்த, சடை வாழ்வை—சடையையுடைய செல்வ மாயுள்ளவரும், திசை அனைத்தும்—திக்குகள் முழுவதும், தேங்கு—நிறைந்துள்ள, ஒன்றை—ஒரு பொருளும் ஆகிய சிவபெருமானை, அண வல்லார் யார்—அடையமாட் டாதவர் யாவர், பொறிதாம்—பஞ்சேந்திரியங்களா னவை, எமை சினம் செய்து கொன்று—எங்களைக் கோபித்து மிக வருத்தி, ஐயா ரணம் செய்யாது—பிதாவே*

புண்ணாக்காது, முல்லைத்தலத்து இறைவா—திருமுல்லை வாயிலாகியதிருப்பதியில் எழுந்தருளியிருக்கும்முதல்வரே, தாங்கு—காத்தருளும், ஒன்று ஐ ஆரண என்று—ஒன்றிய அழகிய வேதப் பொருளானவரே யென்று, இரந்து ஏத்தும் தவம் பெறின் — வேண்டிப் புகழ்கின்ற தவத்தைப் பெற்றால். (எ—று)

பிதாவே முதல்வரே ஆனவரே புண்ணாக்காது காத்தருளும் என்று புகழ்கின்ற தவத்தைப் பெற்றால் சிவபெருமானை அடையமாட்டாதவர் யாவர் எனக் கூட்டுக. முதலடியில் கொன்றை ஆர் ஆகுபெயர்கள். மூன்றாமடியில் இரணம் ரணம் எனத் தொகுத்தல் விகாரம் பெற்று நின்றது. (2)

தவலரும் பல்கலை தேர்முல்லை வாயிற் சயிலவில்லார்
சுவலரும் பல்கலை தந்திடக் கோண்டவர் தூயமதி
நுவலரும் பல்கலை நீர்முடி யாரை நுவன்றறியா
அவலரும் பல்கலை வேண்டியென் வீணி லலைவதுவே.

(பதவுரை) தவல் அரும்—கெடுதல் இல்லாத, பல் கலை தேர்—பல நூல்களை ஆராய்ச்சி செய்கின்ற, முல்லை வாயில்—திருமுல்லை வாயிலின் கண் எழுந்தருளியிரா நின்ற, சயில வில் ஆர் சுவலர்—மேருமலையாகிய வில்லானது பொருந்திய பிடரினையுடையாரும், உம்பல்—யானையானது, கலை தந்திட—தோலாகிய வஸ்திரத்தைக் கொடுக்க, கொண்டவர்—(அதனை) அணிந்து கொண்டவரும், நுவல்—சொல்கின்ற, தூய மதி அரும்பு—சுத்தமுடைய பிறைக் கண்ணியும், அலை நீர்—திரையையுடைய கங்கை நீரும், அல்கு முடியாரை—தங்கிய திருமுடியை

யுடையாரும் ஆகிய சிவபெருமானை, நுவன்று அறியா அவலரும்—துதித்தறியாத எளியரும், பல்கலை வேண்டி—(போகங்கள்) அபிவிருத்தியாதலை விரும்பி, வீணில் அலைவது என்—வீணாக உழல்வது என்னையோ? (எ-று)

யான் அறியேன் என்பது எஞ்சி நின்றது. துதித்தால் எண்ணியவற்றை இருக்கும் இடத்தே கூட்டுவர் என்பது கருத்து. (3)

அலைவன மந்தரங் காற்றங்கி மண்ணெனு மைந்துமல்லாத்
திலைவன மந்தரங் கத்தான மாத்திரு முல்லையின்வாழ்
தலைவன மந்தரங் காட்டுநஞ் சுண்டு தருவிசும்பிற்
கலைவன மந்தரங் காப்பினை மாற்றுங் கருணை யென்னே.

(பதவுரை) அலை வனம்—அலையையுடைய நீரும், அந்தரம்—ஆகாயமும், காற்று அங்கி—காற்றும் அக்கினியும், மண் எனும் ஐந்தும் அல்லா—பூமியும் ஆகிய பஞ்ச பூதங்களும் அல்லாத, தில்லை வனம்—(சிதாகாச வடிவமான) சிதம்பரஸ்தலத்தை, அந்தரங்கம் தானம் ஆ—இரகசிய ஸ்தலமாகக் கொண்டு, திருமுல்லையின் வாழ் தலைவன்—(அத்தாணித் தானமாகிய) திருமுல்லை வாயிலின்கண் எழுந்தருளியிருக்கும் முதல்வராகிய சிவபெருமான், அ மந்தரம் காட்டும்—(கடலைக் கடைந்து) அந்த மந்தரகிரியினால் கொடுக்கப்பட்ட, நஞ்சு உண்டு—விடத்தை யுண்டு, தரு விசும்பில்—பஞ்ச தருக்களையுடைய சுவர்க்க லோகத்திலுள்ள, கலைவு அன—குலைவுற்று ஓடிய அத்தன்மையுடைய, மந்தர் அங்காப்பினை—அறிவிலிகளாகிய தேவர்கள் வாய் திறந்து அழுதலை, மாற்றும் கருணை என்—போக்கிய திருவருள் (இருந்தபடி) என்னை. (எ-று)

அத்தாணித்தானம்-அரசிருக்கைத்தலம். இல்லை என்பது இலை என இடைக் குறைந்து நின்றது. மூன்றாமடியில் அம்மந்தரம் என்பது அமந்தரம் என நின்றது. இறுதியடியில் அன்ன என்பது அன என இடைக் குறைந்து நின்றது. பஞ்ச தருக்களாவன—கற்பகம், மந்தாரம், பாரிசாதம், சந்தானம், அரிசந்தனம் என்பனவாம். இரண்டாம் அடியில் அந்தரங்கத் தானம் என்பதற்கு அழகையுடைய அம்பலத் தானம் எனினும் அமையும். அப்பொருள் கொள்ளுங்கால் அரங்கம் என்பது ரங்கம் என அகரம் தொகுத்தல் விகாரம் பெற்று நின்றதாகக் கொள்க. (4)

கரும மலங்கோடு மாயையு நீக்கிக் கதிர்த்துவரால்
தரும மலங்கோடு பாய்தடஞ் சூழ்முல்லை தன்னிலொன்னார்
மரும மலங்கோடு செற்றோன் பரச வரும்பெருமான்
அரும மலங்கொடு மாமாசி லாமணி யாண்டகையே.

(பதவுரை) கருமம் மலம் கொடுமாயையும் நீக்கி—கன்மமும் ஆணவமும் கொடிய மாயையும் ஆகிய பாசங்கள் மூன்றையும் கெடுத்து, வரால்—வரால் மீன், கதிர்த்து—கருவங்கொண்டு, தரும மலங்கொடு பாய்—இயல்பாகிய மலங்கு மீனொடு பொருகின்ற, தடம் சூழ் முல்லை தன்னில்—வாவிகள் சூழ்ந்த திருமுல்லை வாயிலின் கண்ணே, ஒன்னார் மருமம்—பகைவருடைய மார்பத்தை, அலம் கொடு செற்றோன்—கலப்பையாகிய படைக்கலத்தால் (பிளந்து) கொன்ற பலராமன், பரச வரும் பெருமான்—புகழும் வண்ணம் எழுந்தருளிய கடவுளே, அரும் அமலம் கொடு—அரிய பரிசுத்தத் தன்மையை (அடியே

னுக்குக்) கொடுத்தருளும், ' மா மாசிலாமணி ஆண்டகையே — பெருமை பொருந்திய மாசிலாமணி யீசரே (எ—று)

கடவுளே, ஈசரே, பாசங்கள் மூன்றையும் கெடுத்துப் பரிசுத்தத் தன்மையைக் கொடுத்தருளும் எனக் கூட்டுக. (5)

கைதவ நாடகங் காட்டி யறிவைக் கமரகத்தே
பெய்தவ நாடக வாக்கழித் தாய்புகழ் பெற்றதொண்டைச்
செய்தவ நாடக முல்லைப் பிரான்பதஞ் சிந்தைசெய்தே
நைதவ நாடக மேயெங் குளானெங்க ணம்பனென்றே.

(பதவுரை) கைதவ நாடகம் காட்டி—வஞ்சகமாகிய நடிப்பைச் செய்து, அறிவை கமரகத்தே பெய்து—உணர்வை (உலக மார்க்கமாகிய) பிளவிலே ஒழுகவிட்டு, தகவு நாள்—பயன் பெறத் தக்க காலங்களை, அவம் ஆகழித்தாய்— (இது வரையும்) வீணுகப் போக்கினுய், (இன்னமும் அவ்வாருக்காது) புகழ் பெற்ற தவம் செய்—(சான்றோருடைத்து என்பது முதலிய) கீர்த்திகள் அடைந்த பதிபுண்ணியங்கள் செய்யத் தக்க, தொண்டை நாடு அகம் — தொண்டை மண்டலத்தினிடத்ததாகிய, முல்லைப் பிரான்—திருமுல்லை வாயிலின் கண் வீற்றிருந்தருளும் கடவுளுடைய, பதம் சிந்தை செய்தே—திருவடிகளைத் தியானித்துக் கொண்டே, அகமே—மனமே, எங்கள் நம்பன்—நம்முடைய நம்பன் என்னும் திருநாமமுள்ள அச்சிவபிரான், எங்கு உளான் என்று—எங்கே எழுந்தருளியிருப்பாரென, தவ நாடு—பெரும்பான்மையும் ஆராய்ச்சி செய்வாயாக, நை—(செய்து) உருகுவாயாக. (எ—று)

இங்ஙனம் பத்தி செய்தலே புத்தி முத்தி சாதனம் என்பது கருத்து. மனமே என்பதை முதலிற் கூறிக் கொள்க. சான்றோருடைத்து என்பதற்குப் பிரமாணம்: தமிழ் நாட்டு மூவேந்தரும், ஒருங்கு கூடிய அவைக் களத்தே தேய இயற்கைகளைப்பற்றி வினா நிகழ்ந்த வழி ஓதாதுணர்ந்த ஔவையார் "தெண்ணீர் வயற்றொண்டை நன்னாடு சான்றோருடைத்து" எனக் கூறிய உண்மைத் திருவாக்கானுமுணர்க. (6)

எங்கணம் பன்பர சேரடி யாரி னிணைமலர்த்தாள்
அங்கணம் பன்பர சேமுல்லை யாயரு ளென்றமரர்
தங்கணம் பன்பர சேய்கரத் தான்முல்லை தன்னிறையாஞ்
செங்கணம் பன்பர சேதனன் பாதமென் சிந்தையதே.

(பதவுரை) எங்கள் நம்பன்—நம்முடைய நம்பன் என்னும் திருநாமத்தையுடையவரே, பரசு அடியாரின்—(உலக முழுவதும்) துதிக்கின்ற (உம்முடைய) திருத் தொண்டர்களது, மலர் ஏர் இணைத்தாள்—செந்தாமரை மலர் போலும் அழகிய இரண்டு திருவடிகளை, அங்கண் நம்பு—அவ்விடத்து விரும்புகின்ற, அன்பு—பத்திமையை, அரசே—நாயகரே, முல்லையாய் — திரு முல்லைவாயிலை யுடையவரே, அருள் என்று—தந்தருளும் என, அமரர் தம் கணம் பன்—தேவர் கூட்டங்கள் புகழ்கின்ற, பரசு ஏய் கரத்தான்—மழுப்படையைத் தாங்கிய திருக்கையை யுடையவரும், முல்லை தன் இறை ஆம்—முல்லை நிலத்திற் குக் கடவுளாகிய, செங்கண் அம்பன்—சிவந்த கண்ணை யுடைய விஷ்ணுவைப் பாணமாக உடையவரும், பர சேதனன் பாதம்—பரஞான வடிவினரும் ஆகிய சிவபிரான் திருவடியானது என் சிந்தையது—என்னுடைய மனசின் கண் இருக்கின்றது. (எ-று)

உடையவரே, நாயகரே, உடையவரே பத்தி தந் தருளும் எனப் புகழ்கின்ற என்க. செங்கண் அன்மொழித் தொகை. (7)

சிந்தைத் திருக்கு மரமுங் களவுஞ் செறிந்தவஞ்ச
கந்தைத் திருக்கு மரநேர் விழியவர் காமங்களும்
முந்தைத் திருக்கு மரன்மா யமுமுடித் தாளுமொரு
விந்தைத் திருக்கு மரபறி யாமுல்லை மெய்ப்பொருளே.

(பதவுரை) சிந்தை திருக்கு மரமும்—கோணிய மரம் போன்ற மனத்தையும், களவும்—களவையும், செறிந்த வஞ்சகம் தைத்து இருக்கும்—மிக்க கபடத்தை அடைத் திருக்கின்ற, அரம் நேர் விழியவர் காமங்களும்—அராவும் கருவிபோன்ற கண்களையுடைய பெண்களிடத்துண்டா கிய ஆசைகளையும், திரு முந்தை குமரன்—இலக்குமியின் மூத்த பிள்ளையாகிய மன்மதன் செய்கின்ற, மாயமும்—வஞ்சகத்தையும், முடித்து ஆளும்—கெடுத்து என்னை ஆண்டருளும், ஒரு விந்தைத்து—ஓர் அதிசயத்தை யுடைய தாய் இருக்கின்றது, இருக்கும் மரபு அறியா — வேதங் களாலும் இவ்வியல்பினதென்று உணரப்படாத, முல்லை மெய்ப்பொருள் — திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளி யிராநின்ற தத்துவப் பொருள் (எ—று). (8)

பொருப்புக் குழைத்த கரத்தார்வ முல்லைப் புரத்ததியான்
கருப்புக் குழைத்த கரத்தார் நகக்கலங் காதருளும்
விருப்புக் குழைத்த கரத்தார் மலர்க்குழன் மெல்லியலா
மருப்புக் குழைத்த கரத்தார் தலைமைத்தேன் வாழ்முதலே.

(பதவுரை) பொருப்பு குழைத்த கரத்து — மேரு மலையை வில்லாக வளைத்த திருக்கையையுடையது.

ஆர்வம் முல்லை புரத்தது — (தேவரும்) விரும்பத்தக்க திருமுல்லைவாயிலாகிய திருப்பதியையுடையது. யான் கருபுக்கு உழைத்து — நான் (இன்னமும் அன்னை) வயிற்றிற் புகுந்து வருந்தி, அகரத்தார் நக — உலகத்தார் (இகழ்ந்து) நகைக்கும் வண்ணம், கலங்காது அருளும் — சஞ்சலப்படாமற் கருணை செய்கின்ற, விருப்பு குழை — விரும்புதலுடைய காதணியையும், தகரத்து ஆர் மலர்க் குழல் — மயிர்ச் சாந்தையும் இணைத்த புஷ்பங்களையும் (அணிந்த) கூந்தலையும், ஆம் மருப்பு மெல் இயற்கு உழைத்து — வளப்பமாகிய பூங்கொம்பு போன்ற மிருதுவாகிய தன்மையையுடைய திருமேனியையும் பெற்ற உமாதேவியாருக்கு (வலப்) பாகத்தையுடையது. அகரத்து ஆர் தலைமைத்து — (மெய்யும் உயிருமாகிய எழுத்துக்கள் எல்லாவற்றினும் நிறைந்த தலைமையை யுடைய) அகரத்தைப் போல (சராசரப் பிரபஞ்சங்கள் எல்லாவற்றிலும்) நிறைந்த தலைமையையுடையது, என் வாழ் முதல் — என்னுடைய மெய்ச் செல்வமாகிய முதற் பொருள் (எ-று).

முதலடியில் கரத்தது எனற்பாலது கரத்து என அகரச் சாரியை தொக்கது. மெல்லியல் அன்மொழித் தொகை. வாழ்வு என்பது வாழ் என முதனிலை மாத்திரையாக நின்றது. (9)

வாரம் படைத்த கருநீலக் கண்மயில் பாகரயில்
வாரம் படைத்த கருவந்த கோன்றொழு மன்னர்செய்யின்
வாரம் படைத்த கருவறப் பார்க்கிடம் வண்டொழில்சேய்
வாரம் படைத்த கருவாற் குலைசெய் வளமுல்லையே.

(பதவுரை) வாரம் படைத்த கருநீலக் கண் மயில் பாகர் — நீரினுண்டாகிய கரிய நீல மலர் போலும் கண்களையும், மயில் போலும் சாயலையும் உடைய உமாதேவியாரைப் பாகத்திலே வைத்தருளியவராயும், வார் அம் அயில் படை — நீண்ட அழகிய வேற்படையோடு, தகர் உவந்த கோன் — ஆட்டுக் கடாவையும் மகிழ்ச்சியாகக் கொண்டருளிய முதல்வராகிய முருகக் கடவுளால், தொழும் மன்னர் — வழிபடப் பெற்ற நாயகராயும், வாரம் செய்யின் — பத்தி செய்தால், படைத்த கரு அறுப்பார்க்கு இடம் — வினைக்கீடாகப் பெற்ற பிறவியை ஒழிக்கின்றவராயுமுள்ள சிவபிரான் எழுந்தருளியிருத்தற்குத் தானமாவது, வண் தொழில் செய்வார் — நல்ல (உழவு முதலிய) தொழில் செய்வாராகிய மள்ளர், அம்பு அகருவால் அடைத்து — நீரை அகிற் கட்டைகளால் அடைத்து, குலை செய் வளம் முல்லை — கரை செய்யப் பெற்ற பெருமையுடைய திருமுல்லை வாயிலாகும் (எ—று) (10)

முல்லைப் பதிகமஞ் சூற்கொண்டல் சூழ்முது குன்றினும்வாழ்
தில்லைப் பதிக மடமார்பன் மூவர் திருத்தமிழின்
சொல்லைப் பதிக மலர்த்தொடை யான்றன் றுணைமலர்த்தாள்
ஒல்லைப் பதிக மனத்தே யமன்வரு முப்பொழுதே.

(பதவுரை) முல்லை பதி — திருமுல்லை வாயிலாகிய பதியிலும், கமம் சூல் கொண்டல் — நிறைவு பெற்ற கருப்பத்தையுடைய மேகங்கள், சூழ் முது குன்றினும் — சூழ்கின்ற பழமலையாகிய திருப்பதியிலும், தில்லை வாழ் பதி — ஸ்ரீ சிதம்பரமாகிய திருப்பதியிலும் எழுந்தருளி

யிருக்கின்ற முதல்வராயும், கமடன் மார்பன்—கூர்மத்தின் புறவோட்டை(ப்பதக்கமாக)த்தரித்த திருமார்பையுடைய வராயும், மூவர் திருத்தமிழ் — திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார் ஆகிய மூவரும் (திருவாய்மலர்ந்தருளிய) திருநெறித் தமிழாகிய, இன் சொல் மலர்—இனிய சொல்லாகிய மலர்களால் (அமையப் பெற்ற), ஐ பதிகத் தொடையான் தன் — அழகிய திருப்பதிக மாலையை அணிந்தவராயுமுள்ள சிவபெருமானுடைய, மலர் துணைத் தாள் — செந்தாமரை மலர் போலும் இரண்டு திருவடிகளை, மனத்தே ஒல்லை பதிக — மனசின் கண்ணே சீக்கிரம் அழுத்தக் கடவீர், உப்பொழுதே யமன் வரும் — உந்தக் கணப் பொழுதிலே இயமன் வருவன் ஆதலால் (எ—று)

கமடம் — ஆகு பெயர். இறுதியடியில் பதிக்க எனற்பாலது பதிகளனக்ககரமெய்விகாரத்தாற்றொக்கது.

(11)

தேங்கடம் புந்திகழுமலர்ச் சென்னிச்செவ் வேளைப்பெற்றோய்
தாங்கடம் புந்தி கழுமலக் கோன்றமிழ் சூடியடி
யோங்கடம் புந்தி கழுமலற் றோங்க வுயர்முல்லையாய்
ஆங்கடம் புந்தி கழுமலத் தெவ்வற வாணைகொண்டே.

(பதவுரை) தேம் கடம்பு மலரும் — தேனையுடைய கடப்பம் பூவும் (வெட்சிப் பூவும்), திகழும் சென்னி — விளங்குகின்ற திருமுடியையுடைய, செவ்வேளைப் பெற்றோய் — முருகக் கடவுளைத் தந்தருளியவரே, தாங்கு — காத்தருளும், அடம்பு — அடம்பந்தளிரையும், உந்தி —

கங்கையாற்றையும், கழுமலக் கோன் தமிழ் — சீர்காழிப் பதிக்குத் தலைவராகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருவாய்மலர்ந்தருளிய திருப்பதிக மாலையையும், சூடி — தரித்துள்ளவரே, அடியோங்கள் தம் புந்தி — அடியேங்களுடைய அறிவு, கழுமல் அற்று ஓங்க — மயக்கத்தினின்றும் நீங்கித் தெளிவை யடையும் பொருட்டு, உயர் முல்லையாய் — மேலாகிய திருமுல்லைவாயிலையுடையவரே, ஆங்கு அடு — அவ் அறிவின் கண்ணே அடுத்தருளும், இகழும் மல தெவ் அற — நிந்திக்கப்படும் ஆணவ மலத்தினது பகைமை கெடும்பொருட்டு, கொண்டு — திருவுளங் கொண்டு, ஆணை அம்பு உந்து — திருவருளாகிய பாணத்தைத் தொடுத்தருளும் (எ—று).

திருநாமங்களை அடுக்கித் தெளியும் பொருட்டு அடுத்தருளும் காத்தருளும் எனக்கூட்டுக. இரண்டாமடியில் அடம்பு ஆகுபெயர். சூடி என்பது பெயர். (12)

கொண்டலங் கண்டரு மால்போலு முல்லைக்
குழகர்முன்னாள்
விண்டலங் கண்டரு மாலுழந் தேங்க
வெகுண்டெழுநஞ்
சுண்டலங் கண்ட ருமாபதி யார்முடி
யூடுமதித்
துண்டலங் கண்டரு மாவா வெனைத்தொண்டு
கொண்டனரே.

(பதவுரை) மால் போலும் கொண்டல் — விஷ்ணுவைப் போலும் மேகங்கள், அங்கு அண் தரு முல்லைக் குழகர் — வந்து சூழும் திருமுல்லைவாயிலையுடைய அழகரும்,

முன்னாள் — பண்டைக்காலத்தே, விண் தலம் கண்டு— தேவர்கள் கண்டு, அருமால் உழந்து ஏங்க— பெரிய மயக்கம் அடைந்து பயப்படும் வண்ணம், வெகுண்டு எழு நஞ்சு உண்டு — (திருப்பாற் கடலினின் றும்) கோபங் கொண்டு தோன்றிய விடத்தையுண்டு, அலம் கண்டர் — அமைந்த கழுத்தையுடையவரும், உமா பதியார்— உமாதேவியாருக்குத் தலைவரும், முடியூடு மதித்துண்டு அலங்கு அண்டரும் — திருமுடியிலே பிறை மதி விளங்கப் பெற்ற மகா தேவருமாகிய சிவபிரான், ஆ ஆ எனை தொண்டு கொண்டனர் — ஆ ஆ (பரிபக்குவ மில்லாத)என்னையும்அடிமையாக்கிக்கொண்டனர் (எ-று)

இவர் பெருங்கருணை இருந்தபடி என்னை என்பது எஞ்சி நின்றது. முதலடியில் அங்கு அசை. விண்டலம் ஆகு பெயர். இழிவு சிறப்பும்மை தொக்கு நின்றது. (13)

கோண்டா னனங்கனஞ் சக்கோடும் பார்வை குரைகடனஞ்
சுண்டா னனங்கனம் வாவியுங் காவு முலாவுமுல்லைக்
கண்டா னனங்கன கம்புத்தி முத்தியுங் காட்டவஞ்சு
பிண்டா னனங்கனற்கண்ணொடு வாழும் பெருமையென்னே.

(பதவுரை) அனங்கன் அஞ்ச கொடும் பார்வை கொண்டான் — மன்மதன் அஞ்சும் பொருட்டுக் கொடிய பார்வையைச் செய்தவரும், குரை கடல் நஞ்சு உண் டான் — ஒலிக்கின்ற கடலில் (உதித்த) விடத்தையுண்ட வருமாகிய சிவபெருமான், அனம் கனம் வாவியும் காவும் உலாவும் — அன்னங்களும் மேகங்களும் (முறையே) தடாகங்களிடத்தும் சோலைகளிடத்தும் சஞ்சரிக்கப் பெற்ற, முல்லைக் கண் — திருமுல்லைவாயிலின் கண்ணே

*அனம் கனகம் — அமுது திரவியம் (முதலாகிய இகபர), புத்தி முத்தியும் காட்ட — போகங்களும், வீடு பேறும் (பத்தர்களுக்குத்) தந்தருளும் பொருட்டுத் (திருவுளங் கொண்டு), கனல் கண் — அக்கினிக் கண்கள் அமைந்த, அஞ்சு பிண்ட ஆனனமொடு — ஒற்றுமையாகிய ஐந்து திருமுகங்களோடும், வாழும் பெருமை என் — சிவலிங்க மூர்த்தியாக எழுந்தருளியிருக்கின்ற மகிமை (இருந்தபடி) யாது (எ—று).*

*மூன்றுமடியில் தான் அசை.* *(14)*

பெரும்புங் கவரு மகிழ்ந்தேத்து முல்லைப்பெம் மான்களவே
விரும்புங் கவரு மதியாளர் நட்பை விழையும்வெறுந்
துரும்புங் கவரு மனமிது தீர்த்தேன் றுரிசுளத்தே
யரும்புங் கவரு மவைகளு மாய வரும் பொருளே.

*(பதவுரை) பெரும் புங்கவரும் — (தேவர்களிலே) சிறந்த அரி பிரமேந்திர தேவரும், மகிழ்ந்து ஏத்து — (மற்றும் யாவரும்) மனமகிழ்ந்து துதிக்கும், முல்லைப் பெம்மான் — திருமுல்லைவாயிலையுடைய கடவுளே, களவே விரும்பும் — (பிறர் பொருளை) அபகரித்தலையே இச்சிக்கின்ற, கவரும் மதியாளர் நட்பை விழையும் — இரண்டுபட்ட புத்தியையுடைய தீயோரது சிநேகத்தை விரும்பும், வெறும் துரும்பும் கவரும் என் மனம் — (அன்றி) வறிதாகிய துரும்பையும் (பொருளாகக் கொண்டு) கிருகிக்கும் என்னுடைய (அசுத்த) மனம், துரிசு இது தீர்த்து — (ஆதலால்) குற்றமாகிய இதனைப் போக்கி, உளத்தே அரும்பு — (என்னுடைய சுத்த) மனத்தில் எழுந்தருளியிரும், உங்கு அவரும் அவைகளும்*

ஆய அரும் பொருளே — உயர்திணைப் பிரபஞ்சமும் அஃறிணைப்பிரபஞ்சமும் ஆகிய பெரும்பொருளே (எ—று).

கடவுளே பெரும்பொருளே என அடுக்கி உரைத்துக் கொள்க. இறுதியடியில் உங்கு அசை. (15)

அருவினை யேனை யெவர்புரப் பாரென் றழுங்கிநெஞ்சே
கருவினை யேனை கரமின்றித் தென்முல்லை காவலன்றாண்
மருவினை யேனை வினைகளு நீங்கினை மாற்றினையிவ்
வுருவினை யேனை யுறுதி யினியுனக் கென்குறையே.

(பதவுரை) நெஞ்சே — மனமே, அருவினையேனை — பொறுத்தற்கரிய தீவினையையுடைய என்னை, எவர் புரப்பார் என்று அழுங்கி — யாவர் காத்தருளுவார் என்று அஞ்சி, கருவில் நையேல்— இப்பிறப்பின் கண்ணே தளராதே, நைகரம் இன்றி — வருத்தமின்றி (எளிதாக); தென் முல்லை காவலன் தாள் — அழகிய திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளி யிராநின்ற முதல்வருடைய திருவடிகளை, மருவினை — அடைந்தாய் அல்லவா?, ஏனை வினைகளும் நீங்கினை — (ஆதலால் ஆணவ மலத்தோடு) மற்றைய வினைகளும் ஒழியப் பெற்றாய், இ உருவினை மாற்றினை — (மாயாகாரியமாகிய) இந்தவுடலையும் (அசுத்தம், துக்கம், அநித்தியம் என உவர்த்து) வேறுபடுத்தினாய், இனி ஏன் ஐயுறுதி—இனி எதன் பொருட்டுச் சந்தேகிக்கின்றாய், உனக்கு என் குறை —(பசுத்துவம் நீங்கிய) உனக்கு யாது குறையுளது. (எ—று)

சிவத்துவம் விளங்குதல் சத்தியமே என்பது எஞ்சி நின்றது. இனம்பற்றி ஆணவ மலம் வருவிக்கப்பட்டது.

கரு இனையேல் எனப் பிரித்துக் கருவின் கண் வருந்தாதே எனப் பொருள் கூறினும் பொருந்தும். (16)

குறைமதி யாதவ மாற்றுநர் சேண்மைவெங் கோளர்பொய்ம்மை
மறைமதி யாதவ மாமோ பரமத மார்க்கமிந்த
மிறைமதி யாதவ மாதவர் வாழ்முல்லை மேவுமன
னிறைமதி யாதவ மால்விழி யாரை நினைநெஞ்சமே.

(பதவுரை) குறைமதியாது—(தமது) குற்றத்தை எண்ணாமல், அவம் ஆற்றுநர் கேண்மை — (உலக) வம்புகளைச் செய்கின்ற அறிவிலிகளது நண்பையும், வெம் கோளர் பொய்மமை — கொடிய குறளையர் (கூறும்) அசத்தியத்தையும், மறை மதி — மறுத்தல் செய்வாய், பரமத மார்க்கம்—புறச்சமய ஒழுக்கம், ஆதவம் ஆமோ— ஆ! தவநிலை ஆகுமா, இந்த மிறை மதியா — இந்தக் குற்றத்திற்கு ஏதுவானதைக் கோடல் அறிவா, (ஆதலால் இதனையும் போக்கி) மா தவர் — பெரிய தவத்தினர், தவ வாழ் — மிகுதியும் தங்கப் பெற்ற, முல்லை மேவும் — திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கும், நிறை மதி — கலைகள் நிறைந்த சந்திரனும், ஆதவம் அனல் — சூரியனும் அக்கினியும் ஆகிய முச்சுடரையும், மால் விழியாரை — பெருமைபொருந்திய கண்களாகவுடைய சிவபெருமானை, நெஞ்சே நினை — மனமே சிந்திக்கக் கடவாய். (எ—று)

*இரண்டாமடியில் மதியென்பது முன்னிலை அசைச் சொல். இறுதியடியில் ஆதவமுடைய சூரியனை ஆதவம் என உபசரித்தார். ஆதவம் — ஒளி.* (17)

நெஞ்சகங் கோடி மறமே பயின்றுநன் னீர்மையின்றி
வஞ்சகங் கோடிசெய் தாலும் பொறுத்தருள் வாயையனே
அஞ்சகங் கோடிரிந் தும்பர்குன் றும லமுதுசெய்த
நஞ்சகங் கோடி வளைமுத்த மீன்முல்லை நாயகனே.

*(பதவுரை) நெஞ்சு அகம் கோடி—(என்னுடைய) மனம் கோணுதலுற்று, மறமே பயின்று — பாவச் செய்கைகளிலே பழகி, நல் நீர்மை இன்றி—நன்மையாகிய குணம் இல்லாமல், கோடி வஞ்சகம் செய்தாலும்—அளவு கடந்த கபடத்தைச் செய்யினும், பொறுத்தருள்வாய் — சகித்தருளும், ஐயனே — பிதாவே, கோள் திரிந்து — நவக்கிரகங்களும் பிறழ்ந்து, அம் சகம் உம்பர் குன்றுமல் — அழகிய மண்ணுலகமும் விண்ணுலகமும் நிலை குலையா வண்ணம், அமுது செய்த நஞ்ச — விடத்தை யுண்டருளியவரே, வளை கங்கு ஓடி — சங்குகள் வரம்பு களிலே ஓடி, முத்தம் ஈன் — முத்துக்களை உமிழ்கின்ற, (கழனிகள் சூழப்பெற்ற) முல்லை நாயகனே — திருமுல்லை வாயிலுக்கு முதல்வரே. (எ—று)* (18)

நாயகங் கைக்கிளை தாங்தேங்கங் காயுறி ஞயென்செயுந்
தூயகங் கைக்கிளை மீனமெல் லாமச் சுவைகொள்ளுமோ
தீயகங் கைக்கிளை யார்சேர் கிலாமுல்லைத் திண்பதியெந்
தாயகங் கைக்கிளை யாற்பயன் கோடலத் தன்மையதே.

(பதவுரை) நாய் அகம் — நாயினிடத்தே, கைக்கு இளைதாம் தெங்கங்காய் — கைக்கு முதிராததாகிய தேங்காய், உறின் — அகப்பட்டால், நாய் என் செயும் — (அதனை அந்த) நாயானது யாது செய்யற்பாலது, தூய கங்கை — சுத்தமாகிய கங்கா சலத்திலே, கிளை மீனம் எல்லாம் — வளர்கின்ற மீன்களெல்லாம், அ சுவை கொள்ளுமோ—அந்த நறுநீரின் இரதத்தை கிருகிக்குமா, தீ அகம் கைக்கு — தீமையாகிய பாவ ஒழுக்கத்திற்கு, இளையார்சேர்கிலா—தளராதார் அடையப் பெருத, முல்லை திண் பதி எந்தாய் — திருமுல்லைவாயிலின் கண் எழுந் தருளியிராநின்ற வலிமையுடைய முதல்வரே என்னுடைய பிதாவே, அகம் கைக்கிளையால் — (தேவரீர் திருவருள் கைகூடாது) நான் ஒருதலைக்காமத்தால், பயன் கோடல் அ தன்மையது—பிரயோசனத்தைப் பெறுதல் அவ்வியல் பிற்ருகும். (எ—று)

நாயகம் என்பதற்குத் தலைமையுடையவரே என இலக்கணையாகப் பொருள் கூறினும் பொருந்தும். (19)

தன்னக ராவது தென்முல்லை யேதன் பணிமணிகண்
மின்னக ராவது வைப்பெண் கோடியிடை வெள்விடைநஞ்
சன்னக ராவது செற்றது வாமன்பர் நால்வர்க்கறஞ்
சொன்னக ராவ துலாவென வேத்துநந் தோன்றலுக்கே.

(பதவுரை) தன் நகர் ஆவது தென் முல்லையே — தமது திருப்பதியாவது அழகையுடைய திருமுல்லை வாயிலே, தன் பணி — தம்முடைய ஆபரணங்களாவன, மின் நகு மணிகள் அரா — மிக்க விளக்கமுள்ள மாணிக்கங்கள் (அமைந்த தலைகளையுடைய) பாம்புகளே,

வதுவைப் பெண் கொடியிடை — திருமணஞ் செய்யப் பெற்ற திருமணவாட்டி கொடியிடையம்மையே, வெள் விடை — வெள்ளிய இடபமாவது, நஞ்சு அன்ன கரா அது செற்றது ஆம் — விடம் போலும் கொடிய முதலை யைக் கொன்ற விஷ்ணுவே, அன்பர் நால்வர்க்கு — சனகர், சனந்தனர், சநாதனர், சனற்குமாரர் ஆகிய நான்கு பத்தர்களுக்கும், அறம் சொன்ன கரா — சிவ தன்மங்களை விளக்கிய (சின்முத்திரை பொருந்திய) திருக் கையையுடையவரே, அதுலா — ஒப்பில்லாதவரே, என ஏத்தும் நம் தோன்றலுக்கு — என்று துதிக்கின்ற நம் முடைய தலைவராகிய சிவபெருமானுக்கு. (எ—று)

சிவபிரானுக்கு என்பதை முதலின் எடுத்துரைக்க. மூன்றுமடியில் அது பகுதிப் பொருள் விகுதி. (20)

தோன்றற் கரிய பொருளெளி தேவந்து தோன்றிநற
வூன்றற் கரிய குழன்மா தொடுமுல்லை யுள்ளிருந்து
கூன்றற் கரியல் பறியா முடிபுண்மை கூறியென்னை
யேன்றற் கரியய னேனோ ரழுக்கறத் தென்பயனே.

(பதவுரை) தோன்றற்கு அரிய பொருள் — வெளிப்படுதற்கு அருமையாகிய முதற் பொருள், (பெருங் கருணையினாலே திருவுருக் கொண்டு) எளிதே தோன்றி வந்து—எளிதாக வெளிப்பட்டு (இப்பூமியின் கண்) வந்து, நறவு ஊன்று — தேன் தங்கிய (பூக்களையணிந்த), அல் கரிய குழல் மாதொடு — இருள் போலும் கரிய கூந்தலை யுடைய உமாதேவி சமேதராக, முல்லையுள் இருந்து — திருமுல்லை வாயிலின் கண் எழுந்தருளியிருந்து, கூன் தற்கர் அறியா — குதர்க்கிகளால் உணரப்படாத, முடிபு

*உண்மை இயல்பு கூறி — (சிவாகமத்தின்) ஞானபாதச் சிறப்பிலக்கணத்தை விளக்கியருளி, என்னை என்றற்கு— என்னை (ஒருபொருட்படுத்தி) அங்கீகரித்தருளினமைக்கு, அரி அயன் ஏனோர் — விஷ்ணுவும், பிரமனும் மற்றை இந்திராதி தேவரும், அழுக்கறுத்து என் பயன் — பொறாமைப்படுதலால் யாது பிரயோசனமாகும். (எ—று)*
*(21)*

என்பதி கந்தனை யேந்துங் குடங்கை யிறைவனரு
ளென்பதி கந்தனை முல்லையிற் சேர்ந்திலை யித்துடக்கா
மென்பதி கந்தனை யன்புவி பொன்பொரு ளென்றழிவ
தென்பதி கந்தனை யையகொல் லோபுக லேழைநெஞ்சே.

*(பதவுரை) என்பதி—எனக்குத் தலைவரும், கம் :தனை ஏந்தும் — பிரமகபாலத்தைத் தாங்குகின்ற, குடங்கை இறைவன்—அகங்கையையுடைய ஈசருமாகிய சிவபிரானது, அருள் என்பது இகந்தனை—கருணையைப் பற்றிலை, முல்லையில் சேர்ந்திலை— (அன்றி, அவர் எழுந்தருளியிருக்கும்) திருமுல்லைவாயிலை (க்காயத்தால்) அடைந்தாயில்லை, இ துடக்கு ஆம் என்பு அதிகம்—இந்த (அகப்) பற்றாகிய உடம்பும் மிக்க சுமையாயிருக்கவும், தனையன் புவி பொன் பொருள் என்று— (புறப்பற்றாகிய) புத்திரனும், பூமியும், திரவியமுமே பொருள் என மதித்து, அழிவது என்—கெடுவது யாது, ஐயகொல்லோ— ஐயையோ, (இனியாதல் உய்யும் வண்ணம் எண்ணி) பதிகம் தனைப் புகல்—தமிழ் வேதமாகிய தேவாரத் திருப்பதிகங்களை (ப்பண்ணோடும் வாக்கினாலே) ஓதக் கடவாய், ஏழை நெஞ்சே—பேதை மனமே. (எ—று)*

*என்பு — ஆகுபெயர்; உம்மைத்தொகை. கொல் ஓ அசைகள். உடம்பும் மிக்க சுமை என்பது — "மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க — லுற்றார்க் குடம்பு மிகை" என்னும் திருக்குறளானு முணர்க.*
(22)

சேவடி வானவ ரேத்தத் திசைமுகன் றேர்செலுத்தச்
சேவடி வானரி தாங்கப் புரஞ்செற்ற தென்முல்லையாய்
சேவடி வானர மேவுங் கயிலைச் சிலம்பினர
சேவடி வானறுந் தீந்தமிழ் பாடவுஞ் செய்தருளே.

*(பதவுரை) வானவர் சேவடி ஏத்த—தேவேந்திரன் முதலிய தேவர்கள் சிவந்த திருவடிகளைத் துதி செய்யவும், திசைமுகன் தேர் செலுத்த — பிரமன் (பூமியாகிய) இரதத்தை நடாத்தவும், அரி சே வடிவான் தாங்க — விஷ்ணு இடப வடிவங் கொண்டு (திருமேனியைத்) தாங்கவும், புரம் செற்ற தென் முல்லையாய் — (பகைவருடைய) நகரங்கள் மூன்றையும் அழித்தருளிய அழகு பெற்ற திருமுல்லைவாயிலையுடையவரே, சே அடி — சே மரத்தின் அடியிலே, வானரம் மேவும் — குரங்குகள் நெருங்கும், கயிலை சிலம்பின் அரசே — திருக்கயிலாய மலையின்கண் எழுந்தருளியிருக்கின்ற நாயகரே, வடி — தெளிவும், வான் — மேம்பாடும் அமைந்த, நறும் தீம் தமிழும் — நல்ல மதுரமாகிய செந்தமிழ்ச் செய்யுள்களும், (ஏனைய முறுகிய செய்யுட்களும் இயற்றும்படி செய்தருளும்) (எ—று)*

*பாடவும் உம்மை எதிரதுதழீஇயது. முறுகிய செய்யுட்கள் சித்திரகவி முதலியன.* (23)

அருளா தரித்திரந் தன்புசெய் வேங்கட் கமருலகோர்
பொருளா தரித்திரந் தானிற்கு மோமுல்லைப் பொன்னையுள்ளா
மருளா தரித்திரந் தேர்ந்தறி யாரம் மடவரையே
வெருளா தரித்திரந் தோவினை காளிங்கு மேவரிதே.

*(பதவுரை) அருள் ஆதரித்து இரந்து — கருணையைப் பாதுகாத்து யாசித்து, அன்பு செய்வேங்கட்கு — பத்திசெய்கின்ற எங்களுக்கு, அமரர் உலகு ஓர் பொருளா — தேவருலகம் ஒரு பொருளாகுமா, தரித்திரம் தான் நிற்குமோ — (இவ்விடத்து) நல்குரவானது நிலைபெறுமா, முல்லைப் பொன்னை — திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருந்து (புத்தி முத்திகளைத் தந்தருளும் பரம்பொருளை, உள்ளா மருள் ஆதர் — சிந்தியாத மயக்கத்தையுடைய மடவோர், இ திரம் தேர்ந்து அறியார் — இந்தத் துணிவைத் தெளிந்துணரார், (ஆதலால்) அம் மடவரையே — அந்த அறிவிலிகளையே, அந்தோ வினைகாள் — ஐயோ கன்மத் தொகுதிகளே, வெருளாது அரித்திர் — அஞ்சாமற் கெடுங்கள், இங்கு மேவு அரிது — இங்கே (எங்களிடத்தே) அடைதல் உங்களுககுப் பொருந்தாது. (எ—று)*

*அமரருலகு அமருலகு எனக் கடைக்குறைந்து நின்றது. மேவுதல் மேவு என முதனிலை மாத்திரையாக நின்றது.* *(24)*

### நற்றுயிரங்கல்

மேவருந் தென்றலுக் காற்றுதேன் மான்வெம்பி னைந்துதனி
யேவருந் தென்றனக் கார்துணை யாவரேன் றேங்கியிந்த

நோவருந் தென்றய னேன்விதித் தானென்று நொந்தழுமாற்
பாவருந் தென்றமிழ் முல்லைப் பிரானருள் பாலிப்பையே.

*(பதவுரை) என் மான் — என்னுடைய பெண்ணானவள், மேவரும் — விரும்பத்தக்க, தென்றலுக்கு ஆற்ருது — தென்றற்காற்றுக்குச் சகிக்காமல், வெம்பி நைந்து—வாடித் தளர்ந்து, தனியே வருந்து என்றனக்கு— தனிமையாகத் துன்பப்படுகின்ற எனக்கு, ஆர் துணை ஆவர் — யாவர் சகாயம் செய்வார், என்று ஏங்கி — என்று இரங்கியும், இந்த நோவு அருந்து என்று — இந்த நோயை அனுபவிப்பாய் என, அயன் ஏன் விதித்தான் என்று — பிரமன் எதன் பொருட்டுப் படைத்தான் என்று, நொந்து அழும் ஆல் — வருந்தியும் அழுவாள், (ஆதலால்) அரும் தென் தமிழ்ப்பா — அரிய செந்தமிழ்ப் பாடல்களையுடைய, முல்லைப்பிரான் — திருமுல்லைவாயிலையுடைத்தாகிய கடவுளே, அருள் பாலிப்பை — கருணை செய்யும். (எ–று) ஆல் அசை.* (25)

## அலர் அறிவுறுத்திவரைவுகடாதல்.

பாலி வடகரை கோடியு மொன்றெனப் பார்ப்பவர்வாழ்
பாலி வடகரை முல்லைப் பிரான்பழி தீரவருள்
பாலி வடகரை வேலெம ரென்னினைப் பாரேனுமைம்
பாலி வடகரை யன்னையர் நேர்ந்தும் பசப்புறினே.

*(பதவுரை) இ அடகு — இந்த இலைக் கறியும், பால் — பால் அன்னமும், அரை — அரைப் பணமும், கோடியும் — கோடி பொன்னும், ஒன்று என பார்ப்பவர் வாழ் — ஒரு சமம் என்று நோக்கும் பெருந்துறவினர்*

வசிக்கும், பாலி வடகரை — பூாலி நதியின் வடகரையில் உள்ள, முல்லைப் பிரான் — திருமுல்லைவாயிலையுடைய கடவுளே, பழி தீர அருள் பாலி—இப்பழிமொழி ஒழியும் வண்ணம் கருணை செய்யும், வடகு அரை வேல் எமர் — தோலை அரையில் உடைய வேலை ஏந்திய எங்கள் சுற்றத் தார், என் நினைப்பார் எனும் — யாது கருதுவாரோ என்று நினைக்கின்ற, ஐம்பால் இவள் — அளகத்தை யுடைய இத்தலைவியானவள், அன்னையர் — தாய்மார், தகரை நேர்ந்தும் — ஆட்டுக் கடாவை (முருகக் கடவுளுக் குப் பலி கொடுப்பதாகப்) பிரார்த்தித்தும், பசப்பு உறின் — பசலை பூத்தலை யடைவாளானால், (எ–று)

என்னை செய்யலாம் ஆதலால் என்பது எஞ்சி நின்றது. ஒழியும் வண்ணம் கருணை செய்யும் என்பதை இறுதியிற் கூறிக் கொள்க. முதலடியில் இவ்வடகு எனற் பாலது இவடகு என வகரமெய் விகாரத்தாற் றொக் கது. அடகால் ஆகிய கறியை அடகு என்றும், பாலா லாகிய அன்னத்தைப் பால் என்றும் உபசரித்தார். மூன் றுமடியில் வடகமென்பது வடகு என ஈறு கெட்டது. (26)

## இரவுக்குறிநேரும்பாங்கி

## தலைவிபருவரல்உரைத்தல்

உறுமாசி லாமணி மாயையென் றேகோள் ளுயிர்க்கிவற்றைத்
தெறுமாசி லாமணி வள்ளல்வெற் பாவுனைத் தேடிக்கண்ணீர்
அறுமாசி லாமணி வைத்தமண் பாவையன் னேனெனுஞ்சீர்
பெறுமாசி லாமணி கேட்குமுன் சோருமிப் பேதையின்றே.

(பதவுரை) மண்—(காரியமாகிய) பிருதிவி முதலிய தத்துவங்களும், இ மாயையே — (காரணமாகிய) இந்த மாயையுமே, ஆசு உறும் இலாம் — குற்றம் பொருந்திய வீடாம், என்று கொள் — என்று கொள்ளுகின்ற, உயிர்க்கு — (பரிபக்குவமுடைய) ஆன்மாக்களுக்கு, இவற்றை தெறும் — காரிய காரணங்களாகிய இவைகளைக் கெடுத்தருள்கின்ற, மாசிலாமணி வள்ளல் வெற்பா — மாசிலாமணியீசருடைய மலையின்கண் இருக்கும் தலைவரே, உனை தேடி கண்ணீர் அறுமா—உம்மைத் தேடிக் கண்டு கண்களினின்றும் வழிகின்ற நீரானது ஒழியப் பெறுவாளா, சிலாமணி வைத்த — கல்லின்கண் அலங்கரித்துவைத்த, மண் பாவை அன்னேன் எனும் — மண்ணாலாகிய பிரதிமை போலும் (பயனற்ற) யான் என்று சொல்லித் துக்கப்படுகின்ற, சீர் பெறும் — மகிமை பெற்ற, ஆ சில ஆம் மணி கேட்கும் முன் — பசுக்களினது சிலவாகிய மணிகளின் ஓசை கேட்கு முன்பே, சோரும் இ பேதை — தளர்கின்ற இத்தலைவியானவள், இன்று — இற்றை நாளிலே. (எ—று)

நீரானது ஒழியப் பெறுவாளா என்பதை இறுதியிற் கூறிக் கொள்க. முதலடியில் மண் உபலக்கணம். இம் மாயை இமாயை என மகரவொற்றுத் தொக்கது. இல்லா மென்பது இலாமெனவும், மூன்றாமடியில் மண்ணி என்பது மணி எனவும் இடைக்குறைந்து நின்றன. இறுதி யடியில் சிலவாமென்பது சிலாமென அகரம் தொக்கது. மணி ஆகுபெயர். துக்கப்படுகின்ற, தளர்கின்ற தலைவி என்க.

(27)

## மாலைவிருப்புரைத்தல்

இன்றக லங்கல வாதொழிந் தாலு மெடுத்தசிலைக்
குன்றக லங்கல நன்கோன்றை யேனுங் கொடுத்தியன்றேல்
மன்றக லங்கல னேதுாணி கட்புனல் வாரவிடா
நின்றக லங்கலர் காணாத முல்லை நிருமலனே.

(பதவுரை) இன்று அகலம் கலவாது ஒழிந்தாலும்—இற்றை நாள் (எங்கள்) மார்பத்தை (நீர்) அணையாது விடினும், எடுத்த சிலை குன்ற — மேருமலையை வில்லாகக் கைக்கொண்டவரே, கலங்கலம்—(யாங்கள்)மயங்கமாட்டோம். நன் கொன்றையேனும் கொடுத்தி — (நீர் அணிந்துள்ள) நல்ல கொன்றைப் பூமாலையாயினும் தந்தருளும், அன்றேல்—அங்ஙனம் தந்தருளாவிடில், மன்ற—அம்பலத்தையுடையவரே, கலம் — கலமோ, கலனே துாணி — கலனே தூணியோ (என்னும் அளவு பெறும் வண்ணம்) கட்புனல் — கண்ணீரை, வார விடா நின்று அகலம் — ஒழுக்கிக் கொண்டு (உமது சந்நிதியைவிட்டு) விலகமாட்டோம், கலர் காணாத முல்லை நிருமலனே — (புறச்சமயிகளாகிய) கீழ்மக்களால் உணரப்படாத திருமுல்லைவாயிலின்கண்ணே எழுந்தருளியிருக்கின்ற (அநாதி) முத்தரே. (எ—று)

திருநாமங்களை அடுக்கி முதலின் உரைத்துக் கொள்க.
(28)

நிருதி யமனன லிந்திர ஞதியர் நேர்ந்திறைஞ்சிக்
கருதி யமனனர்ச் சிக்கநல் குங்கடி முல்லைத்தலை

வருதி யமனனல் காதி யுலாவரை வாழ்த்துவமிம்
பருதி யமனன யப்பே மலமலப் பாழ்ங்குழிக்கே.

(பதவுரை) நிருதி யமன் அனல் இந்திரன் ஆதியர்—நிருதியும் இயமனும் அக்கினியும் தேவேந்திரன் முதலிய தேவரும், நேர்ந்து இறைஞ்சி அர்ச்சிக்க — எதிர்ப்பட்டு வணங்கி அருச்சிக்க, மனன் கருதிய நல்கும் — மனசில் எண்ணியவைகளை (எண்ணியபடி அவருக்குக்) கொடுத்தருளுகின்ற, கடி முல்லை தலைவர் — காவலையுடைய திருமுல்லைவாயிலுக்கு நாயகரும், உதிய மனன் நல்கு — சேரமான் பெருமாளுயனுர் (திருக்கயிலாச மலையின்கண்) ஏற்பித்த, ஆதியுலாவரை வாழ்த்துவம் — ஆதித்திருவுலாவையுடையவருமாகிய சிவபிரானைத் துதிக்கப்பெற்ரும், இம்பர் உதியம் — (ஆதலால் இனி) இப்பூமியின் கண்ணே பிறக்கமாட்டோம், மலப் பாழ்ங் குழிக்கு — (அன்றிப்) பவ்வீயையுடைய பாழ் நரகத்தில், மனல் நயப்பேம் அலம்—பொருந்துதலை விரும்பவுமாட்டோம். (எ-று)

மேலாகிய வீட்டுலகத்தையே அடைவோம் என்பது எஞ்சி நின்றது. மூன்ருமடி நான்காமடிகளில் மன்னன் மன்னல் இடைக்குறை. குழிக்கு என்பது உருபு மயக்கம். (29)

## தலைவனிடத்தலைவிவருந்தல்

கேண்மையி னேரிய நேர்வே மிருவருங் கேழ்முளரித்
தாண்மையி னேரிய லென்றகன் ருரினிச் சார்வர்கொல்லா
மாண்மையி னேரியன் மைந்தனுக் காவளர் முல்லையில்வந்
தாண்மையி னேரியன் மாமிடற் ருன்ற னருவரைக்கே.

(பதவுரை) நேரிய கேண்மையில்—இணக்கமுடைய நட்பின் கண்ணே, இருவரும் நேர்வேம் — (நாங்கள்) இருவரும் ஒரு சமமாவோம், கேழ் முளரி தாள் — ஒளியை யுடைய செந்தாமரை மலர்போலும் பாதங்களையும், மையில் நேர் இயல் — மையில் போலும் சாயலையுடைய பெண்ணே, என்று அகன்றார் — என்று கூறிச் சென்ற தலைவர், இனி சார்வர் கொல் ஆம் — இனி (ஒருக்கால்) வருவர் கொல்லோ, மாண் மையின்-பெருமையினை யுடைய, நேரியன் மைந்தனுக்கா — சோழராசனுடைய புத்திரன் பொருட்டாக, வளர்முல்லையில் வந்து ஆள் — (ஊழி தோறும்) ஓங்குகின்ற திருமுல்லைவாயிலின்கண் வெளிப் பட்டு (அவனை) ஆண்டருளிய, மையின ஏர் இயல் — மையினது அழகு பொருந்திய, மா மிடற்றான் தன் — பெருமை பெற்ற கழுத்தையுடைய' மாசிலாமணியீசரது, அருவரைக்கு — பெரிய மலையின்கண்ணே. (எ-று)

மலையின் கண்ணே பெண்ணே! ஒரு சமமாவோம் என்று கூறிச் சென்ற தலைவர் வருவர் கொல்லோ எனக் கூட்டுக. இரண்டாமடியில் மயில் என்பது மையில் எனப் போலியாய் வந்தது. நேரியல் அன்மொழித் தொகை. ஆம் அசை. 'வரைக்கு என்பது உருபுமயக்கம். (30)

அருவருக் கத்தனி யேமலக் கூட்டி லழுந்துமென்றன்
கருவருக் கதனி மாலை முடித்தவன் காத்தளிக்கும்
இருவருக் கத்தனி மாசலை கேள்வனேண் ணன்பரேன்னும்
ஒருவருக் கத்தனி நாளறுத் தான்முல்லை யூரில்வந்தே.

(பதவுரை) அருவருக்க — வெறுக்கும்படி, மலக் கூட்டில் தனியே அழுந்தும் — பவ்வீ (நிறைந்த இந்த) உடம்பின் கண்ணே (துணையின்றி) ஏகமாகக் (கட்டுண்டு)

வருந்துகின்ற, என்றன் கரு — எனது பிறவியை, தனி அருக்கமாலை முடித்தவன் — ஒப்பில்லாத எருக்கம்பூ மாலையை அணிந்தவரும், அளித்து காக்கும் இருவருக்கு அத்தன் — (முறையே) படைத்துக் காக்கும் தொழிலுடைய பிரம விஷ்ணுக்களாகிய இருவருக்கும் பிதாவும், இமாசலை கேள்வன் — பார்வதி தேவியாருக்கு நாயகரும், எண் அன்பர் என்னும் — மதிக்கத் தக்க பத்தர்களாகிய, ஒரு வருக்கத்தன் — ஒருவருக்கத்தையுடையவருமாகிய சிவபெருமான், முல்லை ஊரில் வந்து — திருமுல்லைவாயிலாகிய திருப்பதியில் எழுந்தருளி, இநாள் அறுத்தான் — இக்காலத்தே கெடுத்தருளினார். (எ—று)

சிவபெருமான் பிறவியைக் கெடுத்தருளினார் எனக் கூட்டுக. இந்நாள் இநாள் என நகரவொற்றுத் தொக்கு நின்றது. (31)

வந்தனை யாற்றம வாக்கொண்டு தாளிணை வாழ்த்துமெய்த்த
வந்தனை யாற்றமர் வார்க்கருள் வான்றரு மையல்கொண்டு
வந்தனை யாற்றமர் காணிலேன் ஞமென்று வைதேனைத்தை
வந்தனை யாற்றம ருண்டே னருண்முல்லை வான்பொருளே.

(பதவுரை) இணைத்தாள் — இரண்டு திருவடிகளையும், தமவாக் கொண்டு — தம்முடையனவாக (மனசின் கண்ணே) பற்றி, வந்தனையால் வாழ்த்தும் — காயிக வணக்கத்தோடு வாக்கினாலே புகழ்கின்ற, மெய் தவம் தன் ஐ ஆற்று அமர்வார்க்கு — உண்மைத் தவத்தினது அழகிய நெறியிலே தங்குகின்ற தொண்டர்களுக்கு, அருள்வன் — கருணை செய்வாராகிய சிவபெருமான்,

*தரும் மையல் கொண்டு வந்தனை ஆல்—கொடுத்த மயக்கம் பூண்டு வந்தாய், தமர் காணில் என் ஆம் என்று—(இதனை நம்முடைய) சுற்றத்தார் கண்டால் யாதாகும் என்று சொல்லி, எனை வைது தைவந்து — என்னைத் திட்டி முதுகு தைவந்து, அனை ஆற்ற மருண்டேன்—மாதாவான வள் சாந்தம் செய்யவும் மயங்கினேன், முல்லை வான் பொருளே அருள் —(ஆதலால்) திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிரா நின்ற பரம்பொருளே கருணை செய்யும். (எ—று)*

மூன்றாமடியில் ஆல் அசை. மெய்த்தவம் தன் ஐயாற்று அமர்வார்க்கு என்பதற்கு **உண்மைத் தவத்தைத் தமது திருவையாற்றில் விரும்பிவதிபவர்க்கு எனப் பொருள் கூறினும் பொருந்தும்.**

சிவபெருமானைப்பவனியிற்கண்ணுற்று மால்கொண்ட மாது சொல்லியது. (32)

### தலைவிநெஞ்சொடுபுலத்தல்

பொருதவி சாகரஞ் சத்தியுங் கும்பனும் பொற்பழிக்க
விருதவி சாகரந் தானும் வருத்துமெய் யன்பருள்ளம்
ஒருதவி சாகரந் தென்முல்லை யாவுடை யாரருளார்
இருதவி சாகர நெஞ்சேயல் லாற்செய லியாதுனக்கே.

*(பதவுரை) பொருத விசாகர் — (சூரபன்மனோடு) பொருத முருகக் கடவுளுடைய, அம் சத்தியும் — அழகிய வேற்படையும், கும்பனும் — அகத்திய மகா முனிவரும், பொற்பு அழிக்க — (முறையே கலக்கியும் உண்டும்) பொலிவினைக் கெடுத்தமையால், விருது அவி — வெற்றி*

யழிந்த, சாகரம் தானும் வருத்தும் — கடலும் துன்பப் படுத்தும், மெய் அன்பர் உள்ளம் — உண்மை நாயன் மாருடைய இருதயமானது, ஒரு தவிசு (ஆ) — ஒப்பற்ற ஆதனமாகவும், தென்முல்லை — அழகையுடைய திருமுல்லை வாயிலானது, ஆகரம் ஆ உடையார்—எழுந்தருளியிருக்கும் தானமாகவுமுடைய சிவபெருமான், அருளார் — கருணை செய்வாரும் அல்லர், (ஆதலால்) நெஞ்சே — மனமே, இரு — இருப்பாயாக, தவி — (அல்லது) இளைப்பாயாக, கர — (அல்லது) ஒளிப்பாயாக, சா — (அல்லது) சாவா யாக, அல்லால் உனக்கு யாது செயல் — (இங்ஙனம்) அன்றி உனக்கு என்னை தொழிலிருக்கின்றது (33)

யாதவ மாதவ ஞரண ஞரின்னு நாடியறி
யாதவ மாதவ டன்பால் வளரெழின் முல்லையினை
யாதவ மாதவ மன்றோவென் னேரிரங் காதிருத்தல்
யாதவ மாதவர் வெற்பா வறிய வியம்புகவே.

(பதவுரை) யாதவ மாதவன் — யாதவ குலத்திற் பிறந்த விஷ்ணுவும், ஆரணனூர் — பிரமனும் (ஆகிய இருவரும்), இன்னும் நாடி அறியாதவ — இன்னமும் தேடிக் காணப்படாதவரே, மாது அவள் தன் பால் — உமாதேவியாருடைய பாகத்தில், வளர் — எழுந்தருளி யிருக்கும், எழில் முல்லையின் ஐயா — அழகையுடைய திருமுல்லைவாயிலுக்கு நாயகரே, தவமா தவம் அன்றோ — (எளியேன் செய்தல்) தவமோ (அல்லது) அவமோ, என் னேர் இரங்காது — (அதனை நோக்காது பெருங்கருணை யினாலே) அடியேன் முன்னே (எழுந்தருளித்) திருவருள்

செய்யாது, அவம் இருத்தல் யாது — சும்மா இருத்தல் என்னை, மாதவர் வெற்பா — பெரிய மேருமலையை வில்லாகவுடையவரே, அறிய இயம்புக—தெளியும் வண்ணம் சொல்லியருளும். (எ—று)

அவள் — பகுதிப் பொருள் விகுதி. திருநாமங்களை அடுக்கியுரைக்க. (34)

## தலைவன் நீடத்தலைவிவருந்தல்

இயம்புக வேதனை யாமந் திரப்பொரு ளென்றுசிறைக்
கயம்புக வேதனை வீழ்த்தோன் புகழ்முல்லைக் கண்ணிருவர்
பயம்புக வேதனை நாடரி தாவளர் பண்ணவன்கா
வியம்புக வேதனை யுற்றேற் கருண்மிக வைப்பதென்றே.

(பதவுரை) வேத அனையாம் — வேத மாதா ஆகிய, மந்திரப் பொருள் இயம்புக என்று — பிரணவப் பொருளைச் சொல்லக் கடவாய் என்று (வினவியதற்குத் தடுமாறினமை பற்றி) சிறைக் கயம் புக—காவற் கூடமாகிய அகழியினுள்ளே செல்லும் பொருட்டு, வேதனை வீழ்த்தோன் — நான்முகக் கடவுளை அமிழ்த்திய அறுமுகக் கடவுளாலே, புகழ் முல்லைக்கண் — துதிக்கப் பெற்ற திருமுல்லை வாயிலின்கண்ணே, இருவர் பயம் புக — பிரம விஷ்ணுக்கள் இருவரும் அச்சமுற்று, தனை நாட—தம்மை ஆராய்ந்து காணுதற்கு, அரிதாஏ வளர் பண்ணவன் — அருமையாகவே ஓங்குகின்ற (முதற்) கடவுளே, காவி அம்பு உக — (மன்மதனவன்) கருங்குவளை மலராகிய பாணத்தைத் தொடுத்தல்பற்றி, வேதனை உற்றேற்கு — வருத்தமடைந்த என் பொருட்டு, மிக அருள் வைப்பது என்று—(நீர்) பெருங்கருணை செய்தல் எங்காளோ. (எ-று)

யான் அறியேன் என்பது எஞ்சி நின்றது. முதலடியில் வேத வன்னை வேதனை என அகரம் தொக்கியும், இடைக் குறைந்தும் நின்றன. இறுதியடியில் உகுக்க என்னும் பிறவினை உக எனத் தன் வினை போல நின்றது. (35)

## பாங்கி தலைவி குறிப்பறிதல்

வைப்பது மத்தக மீதோர் விழிமுல்லை மாநகர்வ
சிப்பது மத்த கயத்துரி போர்ப்பது தேவிசர
ணப்பது மத்தகம் வைப்பார்க் கறுப்பது நான்கிரண்டு
மூப்பது மத்தக வாளர்க்கென் னேயமன் மூண்டதுவே.

(பதவுரை) மத்தகம் மீது வைப்பது ஓர் விழி — நெற்றியிலே தரிப்பது (அக்கினியாகிய) ஒரு கண்ணே, வசிப்பது மா முல்லை நகர் — எழுந்தருளியிருப்பது பெரிய திருமுல்லை வாயில் என்னும் திருப்பதியே, போர்ப்பது மத்த கயத்துரி — (திருமேனியில்) போர்த்துக் கொள்வது மதத்தையுடைய யானைத் தோலே, தேவி சரணம் பதுமத்து — (தம்முடைய அருட்சத்தியாகிய) உமா தேவியாரது பாதாரவிந்தங்களிலே, அகம் வைப்பார்க்கு — சிந்தையைச் செலுத்தும் அடியவருக்கு, அறுப்பது முப்பதும் நான்கு இரண்டும் — கெடுப்பது முப்பத்தாறு தத்துவங்களுமே, அத்தகவாளர்க்கு—அந்த மேம்பட்ட குணமுடைய சிவபிரான் பொருட்டு, மயல் மூண்டது என்னே — மோகம் மிகுத்தது என்னையோ. (எ—று)

*பெண்ணரசீ சொல்லுவாயாக என்பது எஞ்சி நின்றது. தத்துவங்கள் முப்பத்தாறுவன:— ஆன்மதத்துவம் இருபத்துநான்கு, வித்தியா தத்துவம் ஏழு, சிவதத்துவம் ஐந்து என இவை. (36)*

**மூண்டவிக் காமன் றனக்கம் பலர்மொழி நாணரிவில்**
**நீண்டவிக் காமன்ன வைத்தமை போர்நெடுங் காமமகத்**
**தீண்டவிக் காமன் வருத்தா தெமைக்கொக் கிருன்மிடற்றிற்**
**றீண்டவிக் காமன் மிசைதடஞ் சூழ்முல்லைச் சிற்பரனே.**

*(பதவுரை) மூண்ட இ காமன் தனக்கு—(போரின்) மூளுதலுற்ற இந்த மன்மதனுக்கு, அம்பு அலர் — அம்பு மலரும், மொழி நாண் அரி — சொல்லுகின்ற நாணி வண்டும், வில் நீண்ட இக்கு ஆம் — வில்லு நெடிய கரும்பும் ஆகும்; அன்ன வைத்து—அப்படிப்பட்ட கருவிகளைப் பொருத்தி, அமை போர் — நடாத்தும் போரால், நெடுங் காமம் அகத்து — மிக்க காம நோய் மனசிலே (தங்கி), எமை வருத்தாது — எங்களைத் துன்பம் செய்யாமல், ஈண்டு அவிக்காம் மன்—விரைவிலே கெடுக்கமாட்டோம்: கெடுத்தால் உமது கருணைக்கு இலக்காவோம்; கொக்கு இருல் மிடற்றில் தீண்ட — கொக்குகள் மீன்களைக் கழுத்திலே தண்டும்படி, விக்காமல் மிசை தடம் சூழ் — விக்கிக் கொள்ளாது விழுங்கப் பெற்ற வாவிகள் சூழ்ந்த, முல்லைச் சிற்பரனே — திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற ஞான வடிவாகிய கடவுளே. (எ—று)*

*மூன்றும் அடியில் மன் ஒழியிசை. (37)*

**பரம்பரன் பண்டரங் கன்முல்லை வாணனெண் பாற்குணமு**
**நிரம்பர பண்டரங் கன்றேட நீண்ட நிமலனெண்டிக்**

கோரம்பரன் பண்டரங் கண்டோதும் பத்திர வுத்தமயாழ்
நரம்பரன் பண்டரங் கஞ்சே ரருட்கட னந்தெய்வமே.

(பதவுரை) பரம்பரன்—முன்னைப்பழம் பொருட்கு முன்னைப் பழம்பொருளும், பண்டரங்கன் — பாண்டரங்கம் என்னும் திருக்கூத்தையுடையவரும், முல்லைவாணன் — திருமுல்லை வாயிலின் கண் எழுந்தருளியிருக்கின்றவரும், எண்பாற் குணமும் நிரம்பு அரன் — எண்வகைக் குணங்களும் நிறைந்த அரன் என்னும் திருநாமத்தையுடையவரும், அரங்கன் — திருவரங்கஸ்தலத்தையுடைய திருமால், பண்டுதேட நீண்ட நிமலன் — பண்டைக்காலத்தே தேடும்படி (அக்கினிப் பிழம்பாக) ஓங்கிய (அநாதி) முத்தரும், எண் திக்கு ஓர் அம்பரன் — எட்டுத் திசைகளையும் ஒரு வஸ்திரமாகக் கொண்டவரும், பண்தரம் கண்டு ஓதும் — பண்களின் முறைமை நோக்கிப் பாடுகின்ற, பத்திர நரம்பு உத்தமயாழர் அன்பு — திரண்ட தந்திகள் பொருந்திய உத்தமமுள்ள யாழ்ப்பாணரது பத்தி (வலையிற்படுவோரும்) அண்டர் அங்கம் சேர் அருட்கடல் — (பிற்காலத்துள்ள தேவர்கள் செருக்கடையாதபடி பண்டைத்) தேவர்களுடைய எலும்புகளையணிந்த கிருபாசமுத்திரமுமாகிய சிவபெருமானே, நம் தெய்வம் — நம்முடைய கடவுளாம். (எ—று)

எண்வகைக் குணங்களாவன — அளவிலாற்றலுடைமை, இயல்பாகவே பாசங்களினீங்குதல், இயற்கையுணர் வினனாதல், தன்வயத்தனாதல், முற்றுமுணர்தல், பேரருளுடைமை, தூயவுடம்பினனாதல், வரம்பிலின்பமுடைமை என இவை. (38)

நந்த மருமந்த மெய்வாழ்வு மற்றை நலங்களுந்தி
கந்த மருமந்த வான்புகழ் சேர்முல்லைக் கண்ணிருந்த
பந்த மருமந்த மெல்விரல் பாகன் பகைவருரஞ்
சிந்த மருமந் தனைப்போழுஞ் சூலத் திருக்கரனே.

(பதவுரை) நந்தம் அருமந்த மெய் வாழ்வும் — நம்முடைய அருமருந்தன்ன நித்தியமாகிய (முத்திச்) செல்வமும், மற்றை நலங்களும்—ஏனை (இகபர) போகங்களும், திக் அந்தம் மரும் — திசைகளினது முடிவிடத்தைச் (சென்று) பொருந்திய, அந்த வான் புகழ் சேர் முல்லைக் கண் இருந்த—அந்த மேம்பட்ட கீர்த்தி பெற்ற திருமுல்லை வாயிலின்கண் எழுந்தருளியிருந்த, பந்து அமரும் — பந்து பொருந்திய, அந்தம் மெல் விரல் பாகன்—அழகையுடைய மிருதுவாகிய விரல்களையுடைய கையையுடைய உமா தேவியாரைப் பாகத்திலுடையவரும், பகைவர் உரம் சிந்த — பகைவருடைய வலிமை கெடும்பொருட்டு, மருமம் தனை போழும் — (அவர்கள்) மார்பத்தைப் பிளக்கின்ற, சூலம் திரு கரனே—முத்தலைப் படையை (ஏந்திய) திருக்கையையுடையவரும் ஆகிய சிவபிரானே. (ஆவார்) (எ—று)

இருந்த சிவபிரானே செல்வமும் போகங்களும் ஆவர் எனக் கூட்டுக. இரண்டாம் அடியில் மருவும் எனற்பாலது மரும் என நின்றது. மெல்விரல் அன்மொழித் தொகை. இறுதி ஏகாரம் தேற்றப் பொருளில் வந்தது.

(39)

திருமுலை வாயின் மருவுமெந் தாயிளஞ் சேய்க்கழகு
தருமுலை வாயின்னைத் தாலன்றி யுண்ணுந் தகுதியுண்டே

வருமுலை வாயினற் பட்டழுந் தாதேமை யாண்டுமன
மிருமுலை வாயின் மெழுகா யுருகச்செய் தேன்றுகொள்ளே.

*(பதவுரை) திருமுலைவாயில் மருவும் எந்தாய் — திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிராநின்ற என்னுடைய பிதாவே, இளம் சேய்க்கு — இளமைப் பருவமுள்ள குழந்தையின் பொருட்டு, (அன்னையானவள் இரங்கி), அழகு தரும் முலை வாயின் வைத்தால் அன்றி — அழகு பொருந்திய தனத்தை (அக்குழந்தையினது) வாயில் வைத்தாலல்லது, உண்ணும் தகுதி உண்டே — (பசி நீங்கும் பொருட்டுப் பாலைக்) குடிக்குந் தன்மை உளதோ, (ஒரு நாளும் இல்லை என்றபடி) உலைவு ஆய் —(அது போலப் பிறவியின்கண்) அச்சமுடைத்தாய், அரும் இனல் பட்டு அழுந்தாது — பெருந் துன்பக் கடலிலே அகப்பட்டு மூழ்காது, எமை ஆண்டு—(கருணை கூர்ந்து குருமூர்த்தியை அதிட்டித்து வலிதிலே) எங்களை அடிமை பூண்டு, மனம்— மனசானது, இரும் உலைவாய் — (கொல்லனது) பெரிய உலைமுகப்பட்ட, இன் மெழுகு ஆய் உருகச் செய்து — இனிய மெழுகு போலும் இளகச் செய்து,' என்று கொள் — (உமது திருவடிக்கீழ்த் தூங்கும்படி) அமைத் தருளும். (எ—று)*

*முதலடியில் முல்லை முலை என இடைக் குறைந்து நின்றது.* *(40)*

## கலவியின் மகிழ்தல்

கொள்ளுந் திகம்பர முல்லைப் பிரான்பைங் குழவிநிலா
வெள்ளுந்திகம்பர வுஞ்சடை யான்வெற்பி னீர்ச்சுழியைத்
தள்ளுந் திகம்பர நேர்களங் கண்ணி தருநலத்திற்
குள்ளுந் திகம்பர மெல்லா மதிப்பினு மோப்பல்லவே.

(பதவுரை) திக் அம்பரம் கொள்ளும் முல்லைப் பிரான்—திக்குகளை வஸ்திரமாகத் தரிக்கின்ற திருமுல்லை வாயிலையுடைய கடவுளும், பைங் குழவி நிலா — மிக்க இளமையாகிய சந்திரனும், வெள் உந்தி — வெண்மை யாகிய கங்கா நதியும், கம்பரவும் சடையான் வெற்பின்— (நகு)சிரமும் (தங்கிய) விரிந்த சடையையுடையவரும் ஆகிய சிவபிரானது மலையின்கண்ணே, நீர்ச் சுழியைத் தள் உந்தி — நீரிலே (தோன்றிய) சுழியைச் (சமமல்ல வென்று) தள்ளுகின்ற நாபியையும், கம்பு அரம் நேர் களம் கண்ணிதரு நலத்திற்கு — (முறையே) சங்கையும் அரத்தையும் போன்ற கழுத்தையும் கண்ணையுமுடைய தலைவி தரப்பெற்ற இன்பத்திற்கு, உள்ளுந்து — (யாவ ரும்) மதிக்கத்தக்க, இகம் பரம் எல்லாம் — பூவுலகத்தும் தேவுலகத்தும் (பொருந்திய இன்ப) முழுவதையும், மதிப் பினும் ஒப்பல்ல — (அளவு செய்து) கருதினாலும் ஒரு சமமாகாது. (எ—று)

ஆதலால் மனமே! இதனைச் சிந்திப்பாயாக என்பது எஞ்சி நின்றது. இறுதி அடியில் உள்ளும் என்பது உள்ளுந்து என நின்றது எதுகை நோக்கி. (41)

அல்லியந் தாமரை யாளிட மோர்பொழு தவ்வளம்போய்
வல்லியந் தாமரை யாளிட மாமதை வாழ்த்திடன்மின்
பல்லியந் தாமரை யாமத்தி னுங்கண் படாமுல்லையார்ப்
புல்லியந் தாமரை யாசையின் வாழ்த்தும் புலவர்களே.

(பதவுரை) அம் அல்லித் தாமரையாள் இடம் — நீரினிடத்தாகிய அகவிதழ்களையுடைய செந்தாமரைப் பூவை ஆதனமாகவுடைய இலக்குமியிருக்கும் இடமாகிய

நாடானது, ஓர் பொழுது — ஒரு காலத்தில், அ வளம் போய் — அந்தப் பொலிவு கெட்டு, வல்லியம் தாம் மரை ஆள் இடம் ஆம் — புலியும் தாவுகின்ற மரையும் ஆளுகின்ற இடமாகிய காடாதும், அதை வாழ்த்திடன் மின் — (ஆதலால் அநித்தியமாகிய) அவ்(வுலகச் சிறு) வாழ்வைப் பற்றிப் புகழாதேயுங்கள், பல் இயம்தாம் — பலவித வாத்தியங்களானவை, அரை யாமத்தினும் கண்படா — அர்த்த யாமத்திலும் உறங்குதலின்றி முழங்கும், முல்லையார்ப் புல்லி — திருமுல்லை வாயிலையுடையாரை அடுத்து, அம் தாமரை — அழகிய சோதிவடிவாகிய (அச்) சிவ பெருமானை, ஆசையின் வாழ்த்தும் புலவர்களே — சிரத்தையோடு (நித்தியமாகிய முத்திப் பெரு வாழ்வை வேண்டிப்) புகழுங்கள் அறிஞர்களே. (எ—று)

இரண்டாம் அடியில் தாவும் என்பது தாம் என நின்றது. முல்லை ஆர்ப் புல்லி அம் தாமரை என்பதற்கு திருமுல்லை வாயிலின்கண் எழுந்தருளியிராநின்ற ஆத்தி மலரினது புறவிதழாலாகிய அழகிய மாலையையுடையவரை என்று பொருள் கூறினும் பொருந்தும். (42)

## இடம்பெற்றுத்தழால்.

புலத்தலை வாவினி யாற்றேமென் றெய்துநர் புந்திவெந்தீப்
புலத்தலை வாவினுங் கைகோடுப் பார்முல்லைப் பூவைவிடு
புலத்தலை வாவிநன் னீர்விளை யாடிப் புணருதும்வா
புலத்தலை வாவிங்ங னென்றருள் வாய்மலர்ப் பூங்கொடியே.

(பதவுரை) புலத்து அலைவு ஆ — அறிவின் கண்ணே சஞ்சலம் உண்டாக, இனி ஆற்றேம் என்று — (அப்பொழுதே) இனிப் பொறுக்க மாட்டோம் என்று, எய்துநர் புந்தி — (அடைக்கலமாக) அடைகின்ற பத்தர்களது

புத்தியானது, வெம் தீ புலத்தலை வாவினும் — வெவ்விய தீய விடயக் கடலிலே (வீழும்படி ஒருபோது) தாவினும், கை கொடுப்பார் — (அங்ஙனம் தாவவொட்டாது தடுத்துக் கருணைக்) கையைத் தந்தருள்வாராகிய சிவபெருமானது, முல்லைப் பூவை — திருமுல்லைவாயிலின்கண் இருக்கும் தலைவியே!, புலத்தலை விடு — ஊடுதலை ஒழி, (ஒழிந்தபின் முதலிலே), வாவி நல்நீர்ப் புணருதும் விளையாடி — தடாகத்திலுள்ள சுத்த சலத்திலே சேர்ந்து விளையாடுவோம், தலைவா மலர்ப் பூங்கொடிவாய் இங்ஙன் புல வா என்று அருள் — (பின்பு) தலைவரே மலர்களையுடைய பொலிவாகிய கொடிகள் செறிந்த இவ்விடத்தே தழுவும் வண்ணம் வருவீராக என்று (நீயே) சொல்லுவாயாக. (எ—று)

எனத் தலைவன் கூறினன் என்பது எஞ்சி நின்றது. இறுதி அடியில் புல்ல என்பது புல என இடைக்குறைந்தது. (43)

## கொடிக்குறிபார்த்தல்

கோடியானை யந்தநல் லூரனை யாண்டநங் கோனைமதக்
கோடியானை யந்தக னைச்சீறி முல்லையுட் கோவைமுல்லைக்
கோடியானை யந்தப வாண்டானை யீண்டுறற் குக்கரைந்தாற்
கோடியானை யந்தமுள் ளாய்க்கிடு வேண்கோளு மூன்பலியே.

(பதவுரை) கொடி ஆனை — கொடியின்கண் இடபத்தையும், அந்த நல் ஊரனை — உயர்ச்சி பெற்ற திருநாவலூரராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனாரையும், ஆண்ட நம் கோனை — ஆண்டருளிய நம்முடைய தலைவரும், மதக்

*கொடியானை — மன்மதனாகிய கொடியனையும், அந்தகனை சீறு — இயமனையும் கோபித்த, இ முல்லையுள் — இத்திரு முல்லைவாயிலின் கண்ணே, கோவை — சோழராசனை (அவனது யானையை), முல்லைக் கொடியான் — முல்லைக் கொடியினாலே (தடைபடச் செய்து பின்பு) ஐயம் தப ஆண்டானை — அச்சந்தேகம் போம்படி (வெளிப்பட்டு) ஆண்டருளியவருமாகிய சிவபிரானை, ஈண்டு உறற்கு — இவ்விடத்தே எழுந்தருளும் நிமித்தமாக, கொடி கரைந்தால் — காகமே (நீ) அழைத்தால், ஐ அந்தம் உள்ளாய்க்கு — ஐந்தாகிய அழகிய குணங்களையுடைய உனக்கு, கொளும் ஊன்பலி யான் இடுவேன் — கொள்ளத்தக்க புலால் உணவை நான் எந்நாளும் வைத்து வருவேன். (எ-று)*

*முதலடியில் அந்த என்னும் சுட்டு உயர்ச்சியின் மேற்று. இம்முல்லை இமுல்லை என நின்றது. இறுதியடியில் அந்தம் ஆகு பெயர். குணங்கள் ஐந்தாவன :— மறைந்த புணர்ச்சித்தாதலும், கலங்காமையும், பொழுது இறவாது இடம் புகுதலும், நெடுகக் காண்டலும், மடியின்மையும் ஆம்.* *(44)*

## பரத்தையைப்பழித்தல்.

ஊன்காளத் திக்குச் சுவையுள தோதிண் ணுடற்கறைக்கால்
நான்காளத் திக்குத் தெளிவுள தோமுல்லை நாயகனெங்
கோன்காளத் திக்குத் தரனலம் யானறி கொள்கையல்லான்
மான்காளத் திக்குக் கியாராவர் போலுமற் றெங்கையரே.

*(பதவுரை) ஊன் காள் அத்திக்கு சுவை உளதோ— புலால் கழிந்த எலும்புக்கு இரதமுண்டோ, திண் உடல்—*

திண்ணிய உடம்பையும், குறை) நான்கு கால் ஆள் அத்திக்கு — உரல் போன்ற நான்கு பாதங்களையும் உடைத்தாகிய (மத) யானைக்கு, தெளிவு உளதோ — புத்திப் பிரகாசம் உண்டோ, முல்லை நாயகன் — (ஆதலால்) திருமுல்லைவாயிலுக்கு நாயகரும், எம்கோன் — எங்கள் முதல்வருமாகிய சிவபெருமானுடைய, காளத்திக்கு தரன் நலம் — திருக்காளத்தி மலைக்குரிய தலைவர் (தரும்) இன்பத்தை, யான அறி கொள்கை அல்லால் — நானே உணர்ந்து (அநுபவிக்கும்) தகுதியல்லது, மான் காள் — மான் போலும் தோழியரே, அ திக்குக்கு — அம்மலையினது திசைக்குத்தான், மற்று எங்கையர் யாராவர் போலும் — என் தங்கைமார் யாராவர் போலும். (எ—று)

நீங்கள் சொல்லுங்கள் என்பதுஎஞ்சி நின்றது. முதலடியில் கால் காள் என 'லகரளகரங்கள் அபேதம்' என்னும் வழக்குப்பற்றி வந்தது. அஸ்திக்குச் சுவையின்மை போலக் காமக்கிழத்தி காதற்பரத்தையராகிய எங்கையரிடத்தே இன்பமில்லை எனவும், யானைக்குத் தெளிவின்மை போலத் தலைவர் இதனைத் தெளியாதிருந்தார் எனவும் உள்ளுறை காண்க. மற்று அசை. (45)

**கைக்க விகமக ணைந்தழுங் கிக்கலங் காதருள்சேர்**
**கைக்க விகமக வாதியி லாசை கருத்துள்ளுக**
**கைக்க விகமக ஞதியர் வாழ்முல்லை காவலன்புன்**
**கைக்க விகமக வுங்கோடு பாய்கழுக் குன்றனையே.**

(பதவுரை) அகம் — மனமே! இகம் கைக்க — இவ்வுலகத்துப் பொருட்சார்பில் அருவருப்படையக்கடவாய்,

நைந்து அழுங்கி கலங்காது — (பிறவியின்கண்) வருந்தி அழுது மயங்காது, அருள் சேர்கைக்கு — திருவருட் சத்தி பதியும் பொருட்டு, மகவு ஆதியில் ஆசை அவிக—மக்கள் மனைவி முதலிய உயிர்ச்சார்பில் (வைத்த) ஆசையை ஒழியக் கடவாய், கருத்து உள்ளுக — (உன்னுடைய) எண்ணத்திற் (பிறழாது) சிந்தனை செய்யக்கடவாய், கை கவி கமகன் ஆதியர்—நல்லொழுக்கமுடைய கவி கமகன் வாதி வாக்கியாகிய நால்வகைப் பண்டிதரும், வாழ் முல்லை காவலன்—வாழப்பெற்ற திருமுல்லைவாயிலுக்கு நாயகரும், புன்கை—சிறிய கைகளையுடைய, கவிமகவும் கொடு—மந்திகள் (தம்மைப்பற்றிய) குட்டிகளையும் (விடாது) கொண்டு, கம்பாய் கழுக்குன்றனை—ஆகாயத்திலே தாவுகின்ற திருக்கழுக்குன்றத்தையுடையவருமாகிய சிவபெருமானது திருவுருவை. (எ—று)

மனமே! பதியும்பொருட்டு அருவருப்படையக் கடவாய், ஒழியக் கடவாய், திருவுருவைச் சிந்தனை செய்யக் கடவாய் எனக் கூட்டுக. முதலடியில் இகத்திலுள்ள பொருட்சார்பை இகம் என்று உபசரித்தார். விடுதல் பற்றுதல் ஆகிய இருவழியிலும் ஒருங்கு பயிலவேண்டும் என்பது கருத்து. (46)

குன்றத்தஞ் சாதி மலர்க்கூந்தன் மாதிடங் கொண்டிருந்த
னன்றத்தஞ் சாதி வழாமுல்லை வாண னடித்தனன்றென்
மன்றத்தஞ் சாதிநெஞ் சேமக் கேன்குறை வாழ்வுபெற்றேம்
பின்றத்தஞ் சாதிரி மாயாயேன் றேவெற்றி பேசுவமே.

(பதவுரை) அம் சாதி மலர்க் கூந்தல் — அழகிய தேன்பொருந்திய பூக்களை (அணிந்த) அளகத்தையுடைய,

*குன்றத்து மாது இடம் கொண்டு இருந்தனன்—பார்ப்பதி தேவியாரை வாம பாகத்தில் வைத்துள்ளவராய், தத்தம் சாதி வழா முல்லை வாணன்—(மாநுடர்) தங்கள் தங்கள் வருணநெறியில் வழுவாமைக்கு இடமாகிய திருமுல்லை வாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற சிவபிரான், தென் மன்றத்து நடித்தனன் — (யாவரும் எளிதிலே தரிசித்து உய்யும் பொருட்டு) அழகிய (கனக) சபையிலே திரு நிருத்தஞ் செய்தருளினார், நெஞ்சே அஞ்சாதி—(ஆதலால்) மனமே பயப்படாதே, நமக்கு என் குறை — நமக்கு யாது குறையுளது, வாழ்வு பெற்றேம் — (திருவடியைத் தரிசித்துப்) பேரின்ப வாழ்வை அடைந்தோம், திரி மாயாய் — (உணர்வை) மாறுபடுத்துகின்ற மாயையே, பின்தத்தம்— (உனக்குப்) பிற்பட்டு ஓடமாட்டோம், சா என்றே வெற்றி பேசுவம் — (நீ) கெடுவாயாக என்றே (இனி) வெற்றி கூறுவோம். (எ—று) (47)*

## புனறருபுணர்ச்சியால்அறத்தொடுநிற்றல்.

பேசித் திருந்தநம் முல்லையில் வந்தெமைப் பேணித்தொண்டீர்
பூசித் திருந்தம் வினைதீர்த்து மென்றருள் பொற்பர்வெற்பில்
நேசித் திருந்தண் புனலீர்க்கும் போதுற்று நேர்ந்தெடுத்தார்
ஆசித் திருந்த படிபோ லொருவரஞ் சாதியென்றே.

*(பதவுரை) தொண்டீர் — பத்தர்களே, நம் முல்லையில் வந்து — (நீங்கள்) நமது திருமுல்லைவாயிலின்கண் வந்து, எமை திருந்த பேணி — நம்மைத் தெளிவுபட (மனசினாலே) தியானித்து, பேசி பூசித்திர்—(வாக்கினாலே) துதித்து (க்கைகளினாலே) அருச்சனை செய்வீராக, உந்தம் வினை தீர்த்தும் என்று — உங்களுடைய கர்மங்களை*

ஒழிப்போமென்று, அருள்பொற்பர் வெற்பில் —திருவாய் மலர்ந்தருளுகின்ற அழகினையுடையாராகிய சிவபெருமானது மலையின் கண்ணே, இரும் தண் புனல் ஈர்க்கும் போது—மிகுந்த குளிர்ச்சியையுடைய (சுனை) நீர் இழுக்கும் பொழுது, நேர்ந்து உற்று நேசித்து — எதிர்ப்பட்டு வந்து ஆசை கொண்டு, ஒருவர் அஞ்சாதி என்று — ஒரு தலைவர் அஞ்சாதே என்று சொல்லி, ஆசித்து இருந்தபடி போல் எடுத்தார் — ஆச்சரியம், (தமக்குச்) சித்தியிருந்தாற் போல (அச்சுனையில் அமிழா வண்ணம் என்னைக்) கரையேற்றினார். (எ—று) என்னை பெண்ணே கூறுவாயாக என்பது எஞ்சி நின்றது. (48)

சாதிப் பரிய தவத்தார்க்கு முல்லைத் தலத்தினுண்மை
போதிப் பரிய னலம்பாடு தும்புல் லறிவுபரம்
பாதிப் பரிய மனைதோறும் வண்டு பகர்ந்ததுமுன்
காதிப் பரிய களிற்றுரி போர்த்ததுங் கட்டுரைத்தே.

(பதவுரை) சாதிப்பு அரிய தவத்தார்க்கு — (பிறராலே) சாதித்தற்கு அரிய தவத்தையுடைய முனிவர்களுக்கு, முல்லைத் தலத்தின் உண்மை போதிப்பர் — திருமுல்லைவாயிலாகிய திருப்பதியில் எழுந்தருளியிருந்து மெய் (ப்பொருளை) விளக்கியருள்வாராகிய சிவபிரான், இயல் நலம் பாடுதும் — (பெத்த முத்தியிரண்டிலும் உயிர்களுக்குச்) செய்து (வரும்) உபகாரத்தை (எடுத்துத்) துதிக்கப் பெற்றோம், புல்லறிவு பரம்பாது —விடயவுணர்வு மேலிடா வண்ணம், இயம் — வாத்தியங்கள் (முழங்குகின்ற), இப்பர் மனை தோறும் — செட்டிப் பெண்களுடைய வீடுகள் தோறும் (போய்), முன் வண்டு

பகர்ந்ததும் — முன்பு வளையல் விலைப்படுத்திய எளிமை யும், காது — தாக்கப்பெற்ற, இ பரிய களிற்று உரி போர்த்ததும் — இந்தப் பெரிய யானைத்தோலை (உரித் துப்) போர்த்துக்கொண்ட வலிமையும், கட்டுரைத்து — உறுதியாகச் சொல்லி. (எ-று)

விடய உணர்வு மேலிடாவண்ணம் உறுதியாகச் சொல்லித் துதிக்கப் பெற்றோம் எனக் கூட்டுக. (49)

கட்டோம் புதலெனக் காமாதி யாறுங் கரிசறுத்தோ
முட்டோம் புதவு திறந்தின்ப வீடுபுக் குச்சரித்தோஞ்
சிட்டோம் புதல்விமண் ணோருந்திகஞ்சந்தெளிவின்முன்பின்
விட்டோம் புதலுறு நள்ளெழுத் தான்முல்லை மேவப்பெற்றே.

(பதவுரை) புதல் என — சிறு தூர்களைப் போல, காமாதி கரிசு ஆறும் — காமம் முதலிய (புறக்) குற்ற மாகிய சடூர்மிகளையும், கட்டோம் அறுத்தோம் — களைந்து ஒழித்தோம், உள் தோம் புதவு திறந்து — அகக் குற்ற மாகிய (ஆணவமலக்) கதவினைத் திறந்து, இன்ப வீடு புக்கு — ஆனந்த மயமாகிய வீட்டின்கண்ணே புகுந்து, சிட்டோம் உச்சரித்தோம் — (அந்த) ஞானார்த்தத்தை யுடைய பிரணவத்தை (மானசிகமாக) ஓதினோம், புதல்வி மண் ஓர் உந்தி கஞ்சம் தெளிவின் — குமாரி காசினி ஒப் பற்ற பாலாறு தாமரை துணிவு என்னும் நாமங்களிலே, முன்பின் விட்டு—முதலினும் இறுதியினும் உள்ள எழுத் துக்களை ஒழித்து, ஓம்புதல் உறும் — (பத்தர்களாற்) பாதுகாக்கப்படும், நள் எழுத்தான் முல்லை மேவப்பெற்று— இடையினுள்ள எழுத்துக்களாலாகிய மாசிலாமணியீசரது திருமுல்லைவாயிலையடைந்து. (எ-று)

திருமுல்லைவாயிலை அடைந்து என்பதை முதலிற் கூறிக் கொள்க. கட்டோம் முற்றெச்சம். காமம் முத

லிய சடூர்மிகளாவன காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம் என இவை. சித்தோம் சிட்டோம் என நின்றது. சிட்டோம் எனவே கொண்டு (மந்திரங்களின் ஆதாரமாய்) மேம்பட்ட (அந்தப் பொருளைத் தரும்) பிரணவம் எனினும் அமையும். இனி, காமாதி ஆறும் கட்டோம்; உள் தோம் கரிசு அறுத்தோம் என்று கூறினும் பொருந்தும். (50)

## நற்றுயிரங்கல்

பெற்ற வரம்பல வுங்குன்ற யான்பிணை போல்வெருள
வுற்ற வரம்பலங் கோதவென் பேதை யொருதனியே
முற்ற வரம்பல செய்தகன் றுளென்னை முல்லைப்பிரான்
கற்ற வரம்பல வற்பணி யாரிற் கடுஞ்சுரமே.

(பதவுரை) யான் பெற்ற பல வரமும்—நான் அடைந்த பல மேன்மைகளும், குன்ற — கெட்டொழியவும், பிணை போல் வெருள—மான் போல அச்சமுறவும், அங்கு உற்றவர் — அவ்வூரிலுள்ளார், அம்பல் ஓத — பழிமொழி கூறவும், என் ஒரு பேதை—என்னுடைய ஒப்பற்ற பெண்ணானவள், தனியே — (துணியின்றி) ஏகமாக, முற்ற வரம்பு அல செய்து அகன்றுள் — முழுவதும் முறையல்லாதவைகளைச் செய்து போயினுள், என்னை—(இச்செய்கை இருந்தபடி) என்னை, முல்லைப் பிரான் — திருமுல்லைவாயிலுக்கு முதல்வரும், கல் தவர் —மேருமலையை வில்லாகக்கொண்ட, அம்பலவற் பணியாரின் — கனகசபையை யுடையவருமாகிய சிவபிரானை வழிபடாதாரைப் போலும், கடும் சுரமே — கொடிய பாலை நிலத்திலே. (எ — று)

ஒழியவும், அச்சமுறவும், கூறவும் பெண் நிலத்திலே போயினுள் என்னை எனக் கூட்டுக. (51)

கடுத்தியம் பாம்பன் மலரானை யாது கவலைநெஞ்சே
விடுத்தியம் பாம்பனல் வாயாற் புகழ்ந்தின்று மேவுதுமுட்
படுத்தியம் பாம்ப லுரிபிறை மான்வெம் பரசோடுந்து
வடுத்தியம் பாம்பணி முல்லையு ளம்பல வாணனையே.

*(பதவுரை) நெஞ்சே—மனமே, அம்பு ஆம் பல் மலரால் — (மன்மதனாலே தொடுக்கப்படும்) பாணங்களாகிய பலவகைப்பட்ட புஷ்பங்களால், நையாது கடுத்தி — வருந்தாமல் (அவற்றைச்) சினந்தொழிப்பாய், கவலை விடுத்து — (பின்பு) சஞ்சலத்தைப் போக்கி, ஆம்பல் இயம்பு நல் வாயால் புகழ்ந்து — அல்லிமலர் போலும் சொல்லத்தக்க சுத்தமாகிய வாக்கினாலே துதித்து, உட்படுத்தி இன்று மேவுதும் — கருத்தின் அமைத்து இற்றைநாள் (நாங்கள்) அடைவோம், அம்பு பிறை ஆம்பல் உரி மான் வெம் பரசொடும் — (திருமுடியிலே) கங்கை நீரும் இளஞ் சந்திரனும் (திருமேனியிலே) யானைத் தோலும் (திருக்கைகளிலே) மானும் வெவ்விய மழுப்படையும் ஆகிய இவைகளோடு, துவள் துத்தி அம் பாம்பு அணி — அசைகின்ற படப்பொறிகளையுடைய அழகிய பாம்புகளை (அவயங்கள் முழுவதினும்) அணிந்து, முல்லையுள் அம்பலவாணனையே — திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிரா நின்ற அம்பலவாணரையே. (எ – று)*

*மனமே ஒழிப்பாய், பின்பு அம்பலவாணரையே அடைவோம் எனக் கூட்டுக. மாநுடப் பதரையும், ஏனைச் சிறு தெய்வங்களையும் புகழ்ந்தறியாதசுத்த வாக்கினால்என்பார் நல்வாயால் என்றார். இறுதி ஏகாரம் தேற்றம். (52)*

அம்பல வாணன் மடவார் விழியேன் றழிந்துழலும்
அம்பல வாணங் கனையலி யாகி யமர்ந்தருளும்

அம்பல வாணன் றிருமுல்லை வாயி லழகன்றில்லை
அம்பல வாணன் வழியினில் லாவென் னறிவுகளே.

(பதவுரை) நல் மடவார் விழி— அழகிய பெண்களுடைய கண்கள், அம்பு அல வாள் என்று—பாணங்களாகும் அல்லது வாட்படைகளாகும் என்று, அழிந்து உழலும் அம்பல — (புதிது புதிதாகப்) புகழ்ந்து உருகி (வீணுகப் பிறவியிலே) சுழலும் (அதனுல்) பழிமொழிகளையுடையன (அன்றி), ஆண் அங்கனை அலி ஆகி அமர்ந்தருளும் ஆணன் — ஒருவன் ஒருத்தி ஒன்றென்று (சுட்டப்பட்ட) பிரபஞ்சம் எல்லாமாய் (அல்லவாய்) எழுந்தருளியிருக்கின்ற அன்புருவானவரும, பல அம் திருமுல்லைவாயில் அழகன் — பலவகை அழகுபெற்ற திருமுல்லைவாயிலையுடைய அழகரும், தில்லை அம்பல வாணன் வழியில் நில்லா — தில்லைப் பதியினிடத்ததாகிய (கனக) சபையையுடையவருமாகிய சிவபெருமான் அருளிய வீட்டுநெறியிலே நிலைபெறுவன அல்ல, என் அறிவுகள் — என்னுடைய உணர்வுகளானவை. (எ – று)

செல்லும்வழி பல ஆதல் பற்றி அறிவுகள் எனப் பன்மைப் பாலாற் கூறினர். சிற்றின்பத்திற்குக் காரணமாகிய பெண்களைத் துறந்து, பேரின்பத்திற்குக் காரணமாகிய வீட்டு நெறியைக் கேட்டுச், சிந்தித்துத், தெளிந்து, நிட்டைகூடிச் சிவபிரான் திருவடி வியாபகத்துள் வியாப்பியமாய் நிற்கவேண்டும் என்பது கருத்து. (53)

அறிவறி யாக மெதுவது வாகமல் லாதவென்றுங்
குறிவறி யாகடி முல்லையிற் சேர்புழுக் கூட்டைவிண்டு
தறிவறி யாகஞ் செயன்பா லேனையர்ச் சனைசெயுன்பாற்
செறிவறி யாகந் தருவலேன் றுண்டனன் சின்மயனே.

(பதவுரை) அறிவு அறி ஆகம் எது ஆகம்—(தத்துவ) உணர்வை ஆராய்தற்கு (க்கருவியாகக் கிடைத்த) உடம்பு எதுவோ அதுவே உடம்பாகும், அல்லாத என் ஆம்—மற்றையுடம்பு எதாகும் [பயனில்லாததே என்றபடி], குறி—(இதனை) மதிப்பாயாக, (மதித்து) வறியா — நுண்ணறிவில்லாதவனே, கடி முல்லையிற் சேர் — காவலுள்ள (நம்முடைய) திருமுல்லைவாயிலை அடைவாயாக, (அடைந்து) புழுக்கூட்டை விண்டு உதறு — கிருமிகள் பொருந்திய (உனது) உடம்பில் வைத்த ஆசையை விட்டொழி, (ஒழித்து நமது திருவடிகளிலே) இவறி—இச்சைவைத்து, யாகம் செய் — (செப ஓம) வேள்விகளைச் செய், (செய்து மந்திரக் கிரியா பாவனைகளிலே குறைவின்றி அகத்தும் புறத்தும்) அன்பால் எனை அர்ச்சனை செய் — பத்திமையோடு நம்மைப் பூஜை செய்வாயாக, (இங்ஙனம் விரத்தியும் சிரத்தையுங் கொண்டு முறையே சரியை கிரியா யோகங்களைச் செய்தால்), உன்பால் செறிவல் —(அவைகளாலே சுத்தம் பொருந்திய) உன்னிடத்தே (இரண்டறக் கலப்போம்), தியாகம் தருவல் என்று —(கலந்து நிரதிசய இன்பப் பெருவாழ்வாகிய) கொடையைக் கொடுப்போம் என்று திருவாய் மலர்ந்து, சின்மயன் ஆண்டனன்—ஞான மூர்த்தியாகிய சிவபிரானவர் (நாயினேனை) அடிமை பூண்டருளினர். (எ - று) (54)

மயங்கா துவரையும் போய்ப்பொருளி யாவும் வரையச்செய்ய
பயங்கா துவரையுண் மால்போற்று முல்லைநம் பாவிழிப்பங்
கயங்கா துவரையு நீள்சீர்க் கொடியிடை காதலசூர்
சயங்கா துவரையு மைங்கர னுரையுந் தந்தவனே.

*(பதவுரை) வரையும் பொய்ப் பொருள் யாவும் — ஒழிக்கத்தக்க அநித்தியமாகிய செல்வங்கள் எல்லாவற்றி லும், மயங்காது வரையச் செய் கா அபயம் — மயங்காமல் (ஆசை) ஒழியும்படி செய்து (அடியேனைக்) காத்தருளும் (உமக்கு) அடைக்கலம், துவரையுள் மால் போற்றும் முல்லை நம்பா — துவாரகாபுரியிலுள்ள விஷ்ணுவினால் வழி படப் பெற்ற திருமுல்லை வாயிலின்கண் எழுந்தருளியிருக் கின்ற நம்பன் என்னும் திருநாமத்தையுடையவரே, விழி பங்கயம் காதுவ்வரையும் நீள் — கண்களாகிய தாமரை மலர்கள் செவியளவும் நீண்ட, சீர் கொடியிடை காதல— அழகிய கொடியிடையம்மைக்கு நாயகரே, சூர் காது சயம் உவரையும் — சூரபன்மனைக் கொன்று வெற்றி கொண்ட உந்த இளைய பிள்ளையாரையும், ஐங்கரனையும் தந்த வனே — ஐந்து திருக்கைகளையுடைய மூத்த பிள்ளையாரை யும் பெற்றருளியவரே. (எ—று) செய் — முற்றெச்சம்.*
*(55)*

**தவத்துக் கணிகல னட்டோனென் றோரிற் றவறுமவை**
**பவத்துக் கணிகல னெஞ்சே யிவைவிடப் பார்வடிவ**
**நவத்துக் கணிகலன் மாவாக்கு முல்லையி னனரியா**
**யவத்துக் கணிகலந் தோர்பான் மருவுமெம் மண்ணலையே.**

*(பதவுரை) தவத்துக்கண் — தவஞ்செய்தற்கண், இகலன் நட்டோன் என்று ஓரில் — (இவன்) பகைவன் (இவன்) நண்பன் எனப் பகுத்து உணரில், தவறும் — (அத்தவம்) அவமாம், நெஞ்சே — மனமே, அவை பவத் துக்கு அணிகலன் — அப்பகுப்புகள் பிறவிக்கு ஆபரணம் ஆம், (ஆதலால்) இவை விடப்பார்— இப்பகுப்புகள் ஒழி*

யும்படி சிந்திக்கக் கடவாய், நவ வடிவத்துக் கண் — உருவம் நான்கும் அருவம் நான்கும் உபயம் ஒன்றுமாகிய நவ வடிவத்தையுடைய கண்போல்பவரும், இகலன் மா ஆக்கும் முல்லையினன் — நரிகளைப் பரிகளாகச் செய்தருளிய திருமுல்லைவாயிலையுடையவரும், அரி ஆய வத்துக்கு—திருமாலாகிய பொருளுக்கு, அணி கலந்து ஓர் பால் மருவும் — (மண) மாலை சூட்டி ஒரு புறத்தே பொருந்தச் செய்த, எம் அண்ணலை — எங்கள் கடவுளுமாகிய சிவபிரானை. (எ—று)

மனமே! ஒழியும்படி சிவபிரானைச் சிந்திக்கக்கடவாய் எனக் கூட்டுக. தவஞ்செய்தலைத் தவம் என உபசரித்தார். பிறவிக்கு ஆபரணமானது பிறவியை வளர்த்தல். தார்க்கிகர் மதம் பற்றி அரியாயவத்து என்றார். மருவுவிகுதும் என்னும் பிறவினை மருவும் என விவ்விகுதி விகாரத்தாற் றெக்கது. (56)

## நற்றாயிரங்கல்.

அண்ணலந் தோய மனைவீட்டி முல்லையி லார்ந்ததுவும்
எண்ணலந் தோய முடித்தது மற்றெம் மிறைவியைப்போல்
உண்ணலந் தோய விழைந்திரந் தேங்கி யுளைந்துநந்தம்
பெண்ணலந் தோய வெளிவந் தருளுமெய்ப் பேறன்றியே.

(பதவுரை) அண்ணல் யமனை வீட்டி—பெருமையிற் சிறந்தவராகிய சிவபிரானே! நீர் இயமனைக் கொன்று, அந்தோ முல்லையில் ஆர்ந்ததுவும் — ஐயோ! திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருந்ததும், தோயம் முடித்ததும் — கங்கை (யின் செருக்கை அடக்கித் திருமுடியிலே)

தரித்ததும் (ஆகிய வெற்றிகளை), எண்ணலம் — நினைக்க மாட்டோம், மற்று எம் இறைவியைப்போல் — எங்கள் பிராட்டியாராகிய உமாதேவியாரைப் போலும், நலம் தோய — (உம்மைக் கலந்து) சுகத்தை அனுபவிக்கும் பொருட்டு, உள் விழைந்து — மனசிலே விரும்பி, நம்தம் பெண் — எங்களுடைய பெண், இரந்து ஏங்கி உலைந்து அலந்து ஓய — (உமது தரிசனத்தை) வேண்டிப் பயந்து வருந்தித் துன்பமுற்றுத் தளரும் பொழுதிலே, எளிவந்து அருளும் — (நீர்) எளிதாகப் (பவனி) வந்து கருணை செய்யும், மெய்ப் பேறு அன்றி — உண்மைப் பயனையல்லது (எ—று) மற்று — அசை.

உண்மைப் பயனையல்லது வெற்றிகளை நினைக்க மாட்டோம் எனக் கூட்டுக. (57)

அன்றினங் காதர மாய்நின்று கத்து மலைகடலெம்
முன்றினங் காதர வத்துக் களவிலை மூரிமதன்
கன்றினங் காதர வாருள ரோவிரு கண்ணுந்துஞ்சா
இன்றினங் காதர மாமுல்லை வாணமற் றெங்களையே.

(பதவுரை) அன்றில் நம் காதரமாய் நின்று கத்தும்— அன்றில் நமக்குத் துன்பம் தருவதாய் (க்கொம்பிலே) இருந்து கூவும, அலைகடல்—திரையையுடைய சமுத்திரம், எம் முன்—எங்கள் முன்னே, தினம் காது அரவத்துக்கு — காடோறும் மோதுகின்ற முழக்கத்திற்கோ அளவு இலை— முடிவு சொல்லக்கூடாது, மூரி மதன் கன்றின் — (இச் சமயத்திலே) வலிமையுடைய மன்மதன் கோபித்தால், அங்கு ஆதரவு ஆர் உளரோ — அவ்விடத்தே பற்றுக் கோடாக (ஆற்றுவிப்பார்) யாவர் உளளார், [ஒருவரு

மில்லை என்றபடி] இரு கண்ணும் துஞ்சா இனம் — (இவ்வாருகிய கவலைகள் பற்றி) இரண்டு கண்களும் நித்திரை செய்யமாட்டா இன்னமும், தரம் மா முல்லை வாண — (ஆதலால் திருவடியார்) திருக்கூட்டமுள்ள பெரிய திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற மாசிலாமணியீசரே, மற்று எங்களை இன்று கா—எங்களை இப்பொழுதே (அங்கீகரித்துக்) காத்தருளும். (எ-று) ஓ, மற்று அசைகள்.

பவனி போந்த மாசிலாமணியீசரை நோக்கி மையலுற்ற மகளிர் சொல்லியது. (58)

### தலைவன்றனக்குத் தலைவி நிலைகூறல்.

களைகண்ட னம்புய மாமுல்லைக் கோன்வெற்ப காதன்மிக்க
கிளைகண்ட னம்புயன் மேவுந் தடவரைக் கீழொருசார்
விளைகண்ட னம்புயங் கஞ்சேல்வல் வேய்சோன் னடை
[நிதம்பம்
திளைகண்ட னம்புய மாக்கோண்டு நிற்குமோர் தீங்கரும்பே.

(பதவுரை) களை கண்டன் — (துன்பத்தை) விலக்கிய (கரிய) கழுத்தையுடையவரும், அம்புயம் மா முல்லை கோன் வெற்ப — செந்தாமரை மலரில் இருக்கும் இலக்குமி (தங்கப்பெற்ற) திருமுல்லைவாயிலுக்கு முதல்வரும் ஆகிய சிவபிரானது மலையையுடைய தலைவரே, காதல் மிக்க கிளை கண்டனம்—அன்பு மிகுந்த (பெண்கள்) கூட்டத்திலே (நாங்கள்) கண்டோம், புயல் மேவும் தட வரை கீழ் ஒரு சார் — மேகங்கள் அமைந்த பெரிய மலைச் சாரலின் ஒருபுறத்தே, விளை கண்டு—(கருப்பஞ்சாற்றிலே)

உண்டாகிய கற்கண்டையும், அனம் புயங்கம் சேல் வல் வேய் — அன்ன நடையையும் பாம்பின் படத்தையும் மீனையும் சூதாடு கருவியையும் மூங்கிலையும், சொல் நடை நிதம்பம் துளை கண் தனம் புயம் ஆ கொண்டு நிற்கும் — (முறையே) சொல்லும் நடையும் அல்குலும் (அழகு) நிறைந்த கண்ணும் கொங்கையும் தோளுமாகப் பெற்று நிற்கின்ற, ஓர் தீங்கரும்பு — ஒப்பற்ற இனிய கரும்பு போலும் தலைவியை. (எ-று)

தலைவரே! ஒருபுறத்தே பெண்கள் கூட்டத்திலே தலைவியைக் கண்டோம் எனக் கூட்டுக.

களைகண்டன் என்பதற்கு அழகிய நீலகண்டர் எனப் பொருள் கூறினும் பொருந்தும். அன்னமும் புயங்கமும் ஆகுபெயர். தீங்கரும்பு அன்மொழித்தொகை. (59)

தீங்கரும் புங்கவ ருடிப் பயனிலை செப்பின்மின்னார்
தாங்கரும் புங்கவ லாக்கனி யும்மெனச் சாற்றியந்தோ
நீங்கரும் புங்க வசையுறு வீர்முல்லை நீணகரின்
பாங்கரும் புங்கவ ரும்போற்று மீசனைப் பாடுமினே.

(பதவுரை) தீங்கு அரும்பும் கவறு ஆடி — பொல்லாங்கு விளைதற்கு (ஏதுவாகிய) சூதாடலைச் செய்தும், செப்பில் பயன் இலை — (தூக்கிச்) சொல்லுமிடத்து (இத்தீத் தொழில்களாற் சிறிதும்) பிரயோசனம இல்லையாம், மின்னார் தாம் — மங்கையரானவர், கரும்பும் கவலா கனியும் என சாற்றி — கரும்பும் கன்றுத பழமும் ஆவர் என்று புகழ்ந்தும், அந்தோ நீங்க அரும் புங்கவசை உறுவீர் — ஐயோ ஒழியக்கூடாத (பாவத்தோடு) மிக்க

பழியை அடைகின்றீர்கள், முல்லை நீள் நகரின் — (ஆதலால் நண்பர்களே) திருமுல்லைவாயிலாகிய பெரிய திருப்பதியின், பாங்கரும் புங்கவரும் போற்றும் ஈசனை பாடுமின் — பக்கத்தும் தேவரும் சூழ்ந்து வழிபடுகின்ற சிவபெருமானையே பாடுங்கள். (எ—று)

சூதாடலைச் செய்தும், புகழ்ந்தும் பழியை அடைகின்றீர்கள்; சொல்லுமிடத்து இத்தீத் தொழில்களாற் பிரயோசனம் இல்லையாம்: ஆதலால், சிவபெருமானையே பாடுங்கள் எனக் கூட்டுக. 'கனியுமென' மகரவொற்று விரித்தல் விகாரம். நீங்க அரும் நீங்கரும் என அகரம் தொக்கது.

புகழ்ந்து பாடினால் புலமை நிலைமை பெற்றுப் போகமும் வீடுபேறும் அடைந்து உய்யலாம் என்பது கருத்து. (60)

பாடக மன்ன வருந்துயர் தீரப் பரன்புகழ்வாய்
பாடக மன்ன வருங்குணம் போனலம் பார்த்தெடுத்துப்
பாடக மன்ன வருளான்றன் பாற்பைங் கோடியிடையேன்
பாடக மன்ன வரும்போற்ற வாழ்முல்லைப் பண்ணவனே.

(பதவுரை) பாடகம் அன்ன — பாடகத்தினது தொடர்ச்சி போல, வரும் துயர் தீர—(தீவினைக்கு ஈடாக) வருகின்ற துன்பங்கள் நீங்கும் பொருட்டு, பரன் புகழ் வாய்பாடு — சிவபெருமானுடைய கீர்த்திகளாகிய வாய் பாடுகளை, அகம் — மனமே! (நீ கற்றவைகளில் மற்றவைகளை விட்டு) அன்ன அரும் குணம் போல் — (நீரொடு கலந்துள்ள பாலைப் பிரித்து உண்ணும்) அன்னப் புள்ளினது அரிய குணம் போல, நலம் பார்த்து எடுத்துப் பாடு—

*நன்றாக நோக்கிச் சிறப்பித்துப் பாடுவாயாக, அகம் மன்ன அருளான்—(பாடினால் துன்பங்களையும் போக்கிப் பின்னும்) பாவங்களை அடையச் செய்வார் அல்லர், தன் பால் பைங்கொடியிடை என்பாள் தக — தம்முடைய பாகத்திலே பசிய கொடியிடை யம்மை உரிமையோடு (தங்கும் வண்ணம்), மன்னவரும் போற்ற —(தேவுலகத் தும் பூவுலகத்தும் உள்ள) வேந்தரும் வழிபடப் பெற்ற, முல்லை வாழ் பண்ணவன் — திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற (அக்) கடவுள். (எ—று)*

*அன்னப்புள்ளின் குணம் போல மனமே! விட்டு வாய்பாடுகளை நீங்கும் பொருட்டுப் பாடுவாயாக; பாடினால் கடவுள் பாவங்களை அடையச் செய்வார் அல்லர் எனக் கூட்டுக. (61)*

**பண்ணகங் காரிகை பான்முல்லை வாயும் பதிந்திருந்தோய்**
**வண்ணகங் காரிகை மற்றுமென் போற்பகர் வாரிலையென்**
**றெண்ணகங் காரிகை தூவா தியற்று மிருவினையாந்**
**திண்ணகங் காரிகை தீண்டுமெந் தாய்கெடச் செய்தருளே.**

*(பதவுரை) காரிகை பால் முல்லைவாய் — உமா தேவியாரைப் பாகத்திலே கொண்டருளித் திருமுல்லை வாயிலினிடத்ததாகிய, பண் அகமும் பதிந்து இருந்தோய்— அழகிய திருக்கோயிலினும் (திருஅடியாரது திருவுளக் கோயில் வேதசிரசு முதலியவற்றினும்) இடைவிடாமல் எழுந்தருளியிராநின்ற சிவபிரானே, காரிகை—கட்டளைக் கலித்துறையும், மற்றும் வண்ணகம்—மற்றும் முடுகியற் பாக்களும், என் போல் பகர்வார் இலை என்று—என்னைப் போல (அமைத்துப்) பாடுவோர் (தமிழ் வழங்கும் நிலத்*

திலே) இல்லையாகும் என்று, எண் அகங்காரி—மதிக்கின்ற அகந்தையையுடையேன், கை தூரவாது இயற்றும் — ஒழியாது செய்கின்ற, இருவினை ஆம் திண் நகம் — கன்மம் ஆகிய திண்ணிய மலையை, காரி கை தீண்டும் எந்தாய் — (கடலின் உண்டாகிய) நஞ்சை அமுது செய்தருளிய என்னுடைய பிதாவே, கெட செய்தருள்— (உமது அருட் பார்வையால்) போக்கியருளும். (எ-று)

சிவபிரானே, பிதாவே என அடுக்கி யுரைக்க. வாயும் என்னும் உம்மை எதிரது தழீஇயது. (62)

செய்தவ மாயத்தன் செல்வமு நீயெனச் சிந்தைசெய்யா

தெய்தவ மாயத்தன் மங்களை மாற்றி யியற்றுமென்றன்

கைதவ மாயத்தன் மைக்கோ ரளவில்லை கண்ணருளாற்

பொய்தவ மாயத்தன் முல்லையுள் ளாய்நலம் போதிப்பையே.

(பதவுரை) செய் தவம் — செய்கின்ற தவமும், ஆய் அத்தன் — மாதாவும் பிதாவும், செல்வமும் நீ — செல்வமும் ஆகிய எல்லாம் நீர், என சிந்தை செய்யாது — என்று புத்திபண்ணாமல், எய்து தன்மங்களை—பொருந்திய புண்ணியங்களை, மாய மாற்றி — மறையும்படி கைவிட்டு, அவம் இயற்றும் — பாவங்களைச் செய்கின்ற, என்றன் கைதவம் மாயத்தன்மைக்கு — என்னுடைய வஞ்சகம் ஆகிய மாயத்தன்மைக்கு, ஓர் அளவு இல்லை — ஒரு பிரமாணம் இல்லையாம், அருள் கண்ணால் — (ஆதலால்) அருட் பார்வையால், பொய் தவ — அசத்தியம் (முழுவதும்) ஒழிய (ச்செய்து), மாயத்தன் முல்லை உள்ளாய்—விஷ்ணுவுடைய முல்லை நிலத்தின் கண்ணது ஆகிய திருமுல்லை வாயிலின்கண் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே,

நலம் போதிப்பை — (சிவ) தருமங்களை உபதேசித் தருளும். (எ—று)

சிவபெருமானே என்பதை முதலின் எடுத்துரைக்க. (63)

திப்பிய மாவடு தண்டுறைக் கண்ணுந் திருந்துநிலை
தப்பிய மாவடுத் தீர்முல்லை யூரினுஞ் சந்தமுலை
யப்பிய மாவடு வார்கண்ணி பாக னமர்ந்துபுகழ்
பப்பிய மாவடு நாமமொன் றுக்கொண்டு பாரிப்பதே.

(பதவுரை) திப்பியம் — திவ்வியமாகும், தண் ஆவடுதுறைக் கண்ணும் — குளிர்ந்த நீர் சூழ்ந்த திருவாவடுதுறை என்னும் திருப்பதியிலும், திருந்து நிலை தப்பிய— திருத்தம் அடைதற்கு ஏதுவாகிய வருணாச்சிரம தருமங்களினின்றும் வழுவிய, மா வடு தீர் — பெருங்குற்றங்கள் ஒழிதற்கு இடம் ஆகிய, முல்லை ஊரினும் — திருமுல்லை வாயில் என்னும் திருப்பதியிலும், சந்தம் அப்பிய முலை — சந்தனம் பூசிய தனங்களையும், மா வடு வார் கண்ணி பாகன்—மாவடுவின் பிளவு (போலும்) நீண்ட கண்களையும் உடைய உமாதேவியாரைப் பாகத்தில் உடைய சிவ பிரான், அமர்ந்து — விரும்பி, புகழ் பப்பி அமா அடு — கீர்த்திகளைப் பரப்பிப் பொருந்திய, நாமம் ஒன்று கொண்டு பாரிப்பது — (மாசிலாமணியீசர் என) திருநாமமும் ஏகமாகவே கொண்டருளித் தோற்றியது. (எ—று)

திவ்வியமாகும் என்பதை இறுதியிற் கூறிக் கொள்க. தண்—ஆகுபெயர். இறுதியடியில் அம்மா என்னும் உரையசை அமா எனத் தொகுத்தல் விகாரம் பெற்று நின்றது. (64)

பாரகங் தைக்கு மரும்புகழ் சேர்முல்லைப் பாலவருள்
பாரகங் தைக்கு மதியார்பின் சென்றுதண் பாலிநதிப்
பாரகங் தைக்கும் வழியின்றி வாடும் பரிசுநன்றே
பாரகங் தைக்குமைக் குங்கயஞ்செற்ற பராபரனே.

*(பதவுரை) பார் அகம் தைக்கும் — உலகம் (முழுவதும்) வியாபித்த, அரும் புகழ் சேர்—பெரிய கீர்த்திகள் அமைந்த, முல்லைப் பால—திருமுல்லைவாயிலைக் காப்பவரே, அருள் பார் — (ஆதலால், முத்திப் பெருஞ்செல்வம் பெறும்படி) கருணையோடு திருநோக்கம் செய்தருளும், அகந்தை கு மதியார் பின் சென்று — (உலகச் செல்வச்) செருக்கையுடைய புல்லறிவாளர் பின்னே போய், தண் பாலி நதி பார — குளிர்மையுடைய பாலியாற்றின் கரையையுடையவரே, கந்தைக்கும் வழி இன்றி வாடும் — பீறற்றுணிக்கும் வழியில்லாது மெலியும், பரிசு நன்றே— தன்மை நன்மையாமா, (தாருகாவனத்து முனிவர் விடுத்த) பார கந்தை குமைக்கும் — பெரிய கட்டுத்தறியைக் கொல்லும், கயம் செற்ற பராபரனே — யானையைக் கொன்றருளிய (உலகத்தோற்றம் இறுதி கட்கு) முன்னும்பின்னும் உள்ள கடவுளே. (எ—று)*

*காப்பவரே உடையவரே கடவுளே போய் மெலியும் தன்மை நன்மையாமா? ஆதலால், திருநோக்கம் செய்தருளும் எனக் கூட்டுக. (65)*

பரங்கிரி யாவிகள் சூழ்முல்லை போற்பரிந் தேன்னுளமாம்
அரங்கிரி யாவிடை யாரரு ளுண்மை யறிவினின்ற
வரங்கிரி யாவியி னுள்ளே யழுத்தும் வகையறியேன்
சிரங்கிரி யாவிதியாற்றஞ்செல்லேனுய்யுஞ்செய்கையென்னே.

*(பதவுரை) பரங்கிரி—(சிறந்த) திருப்பரங்குன்றத்தினும், ஆவிகள் சூழ் முல்லை போல் — வாவிகள் சூழ்ந்த திருமுல்லை வாயிலினும் போல, என் உளம் ஆம் அரங்கு—(சிறவாத) என்னுடைய இருதயம் ஆகிய சபையிலும், பரிந்து—(திருவுளம்) இரங்கி, இரியா விடையார்—நீங்காமல் எழுந்தருளியிருக்கின்ற இடப வாகனத்தையுடையார், அருள் — (குருமூர்த்தியை அதிட்டித்து) உபதேசித்தருளிய, உண்மை அறிவின் நின்று — தத்துவ உணர்வின் (வழியே) நின்று, அவர் அங்கிரி — அச்சிவபிரானுடைய திருவடிகளை, ஆவியின் உள்ளே — ஆன்மாவினிடத்தே, அழுத்தும் வகை அறியேன்—அழுந்தச் செய்யும் (நிட்டையின்) முறைமையை உணர்கிலேன், சிரம் கிரியா விதி — (அன்றி, அத்தத்துவ உணர்விற்கு வாயிலாகிய) உயர்ச்சியுடைய (உண்மைக்) கிரியா விதி, ஆற்றும் செல்லேன்—மார்க்கத்திலும் புகமாட்டேன், உய்யும் செய்கை என் — (இங்ஙனமாயிற்) பிழைக்குந் தொழில் என்னையோ? (எ—று)*

*ஆப்தர்களே! நீங்கள் சொல்லுங்கள் என்பது எஞ்சி நின்றது. கடைப்பட்ட உலக இயலின் நிற்றல் குற்றம் என்பது கருத்து. (66)*

**செய்வசித் தாந்தமிழ் முல்லையு ளீசசெவ் வேமநய**

**வைவசித் தாந்தம் பொருளைந் துடைய வவற்றிரண்டு**

**ஜைவசித் தாந்தவிர் மூன்றுமோன் றேன்றின ணுகுமென்னுஞ்**

**சைவசித் தாந்த நெறியுப தேசந் தனையெமக்கே.**

*(பதவுரை) தமிழ் ஆம் முல்லையுள் ஈச — தமிழ் வளர்கின்ற திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கும்*

கடவுளே, வசித்துச் செய் — (உமது) வசமாக்கிச் செய்தருளும், செவ்வே மநய—முறையே மகர நகர யகரங்களும், ஐ வ சி தாம்—அழகிய வகர சிகரங்களும் ஆகிய திருவைந்தெழுத்துக்கள் தாம், (பாசம் முதலியவாகத்) பொருள் ஐந்து உடைய — தமக்குரிய பொருள்கள் ஐந்தினை உடையன ஆகும், அவற்று இரண்டு நைவ — அவைகளில் (மல திரோதங்கள்) இரண்டும் ஒழிய'த் தக்க (அசேதனப்) பொருள் ஆகும், தவிர் மூன்றும் சித்து ஆம் — எஞ்சிய (பசுவும் அருளும் பதியும் ஆகிய) திரிபதார்த்தங்களும் சேதனப் பொருள் ஆகும், ஒன்று ஒன்றின் நணுகும் என்னும்-(பாசங்களினின்று நீங்கிய) பசு அருளோடு கூடிப் பதியின் வியாபகத்துள் வியாப்பியம் ஆக (இரண்டறக்) கலக்கும் என்று (வேதசிவாகமங்களின்) எடுத்தோதுகின்ற, சைவ சித்தாந்தநெறி உபதேசம் தனை எமக்கு — சித்தாந்த சைவ மார்க்க உபதேசத்தை அடியேங்களுக்கு. (எ-று)

கடவுளே வசமாக்கி அடியேங்களுக்கு உபதேசத்தைச் செய்தருளும் எனக் கூட்டுக. மநய என்றும், தவிர் மூன்றும் சித்து ஆம் என்றும் கூட்டிப் பிரித்தமையால் சத்தொடுகூடிச் சத்தாயும் அசத்தொடுகூடி அசத்தாயும் நிற்கும் சதசத்துப் பசு என்பதும், ஒன்று ஒன்றின் நணுகும் என்றமையால் பசு தூலசித்து என்பதும், அருளும் பதியும் சூக்கும சித்து என்பதும் பெறப்படும். இவற்றின் விரிவெல்லாம் குருமுகத்தாற் கேட்டுணர்க. (67)

**கற்றறிபாங்கன் கழறல்.**

தனையரி யானன நான்கானுந் தேடடத் தாள்முடியாஞ்
சினையரி யானன மார்தடஞ் சூழ்முல்லைச் சிற்பரனேன்

வினையரி யான னருள்சேர்ந்து நீயொரு மின்னின்விழி
யிணையரி யானன னேர்மெழு காயினே னென் ஞம்பிறிதே.

(பதவுரை) அரி — விஷ்ணுவும், ஆனனம் நான்கானும்—நான்கு முகங்களையுடைய பிரமனும், தனை தேடட—தம்மைத் தேடிய வழி, தாள் முடி ஆம் — (முறையே) அடியும் முடியும் ஆகிய, சினை அரியான் — திரு உறுப்புக்களை (அவருக்கு) க்காட்டாதவராயும், அனம் ஆர் தடம் சூழ் — அன்னங்கள் பொருந்திய வாவிகள் சூழப் பெற்ற, முல்லை சிற்பரன் — திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற ஞானரூபியாகிய கடவுளாயும், என் வினை அரி — என்னுடைய கன்மங்களை ஒழிக்கின்ற, ஆனன் அருள் சேர்ந்தும்—இடபாரூடராயும் உள்ள சிவபிரானது கருணையைப் பெற்றும், நீ ஒரு மின்னின் — நீ ஒரு பெண்ணினது, ஐ அரியின் விழியான் — அழகிய வரிகளையுடைய கண்ணின் பார்வையால், அனல் நேர் மெழுகு ஆயின் — அக்கினி முகம்பட்ட அரக்குப்போல உருகுவாயானால், பிறிது என் ஆம் — வேறே (யரன் சொல்லத்தக்கது) யாதாகும். (எ—று) (68)

தேவருந் தானவ ருங்காரி கண்டஞ்சித் தீவினையா
னேவருந் தானவ ஞம்பதுப் பற்றவர் நேர்முல்லைநம்
பாவருந் தானவ வென்றே லிடப்பண் டருந்தியுமந்
தோவருந் தானவ மீதறி யார்சிலர் தொண்டர்களே.

(பதவுரை) தேவரும் தானவரும் — தேவரும் அசுரரும், காரி கண்டு அஞ்சி — (திருப்பாற்கடலினின்றுந் தோன்றிய) ஆலகாலவிடத்தைக் கண்டு பயந்து, தீவினை

யானே வரும்—கொடிய கன்மத் தொடர்பினாலே வருகின்ற, தான் அவன் ஆம் பகுப்பு அற்றவர் — நான் அவன் என்கிற சுட்டுணர்வு கெட்டவர், நேர் முல்லை நம்பா — அணுகப் பெற்ற திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிராநின்ற நம்பன் என்னும் திருநாமத்தை யுடையவரே, அருந்தூ என்று ஓலிட — (அந்நஞ்சத்தை) உண்டு காத்தருளும் என்று முறையிட்ட அளவிலே, பண்டு அருந்தியும் வருந்தான் — (பெருங்கருணையினால் அச்சிவபிரான்) பண்டைக் காலத்திலே அமுது செய்தருளியும் துன்பம் அடைந்திலர், (இங்ஙனம் ஆகியும்) அந்தோ தொண்டர்களே — ஐயையோ அடியார்களே, நவம் ஈது — புதுமையாகிய இவ்வற்புதத்தை, சிலர் அறியார் — (இன்னமும்) சில புன்மதத்தர் உணரமாட்டார். (எ—று)

அவரது அறியாமை இருந்தபடி என்னை என்பது எஞ்சி நின்றது. பகுக்கும் உணர்வைப் பகுப்பு என்று உபசரித்தார். (69)

தொண்டைய நாடுகே டரச்செய் யாமற் றுவரிதழ்வாய்த்
தொண்டைய ளொடு மலர்க்கூந்த லார்க்குடைந் தும்பிழைத்
[தேன்
தொண்டைய ளொடு புகழோங்கு முல்லையிற் றேன்றுமுருத்
தொண்டைய ளொடு மலரடிக் கீழ்நின்று தொண்டுசெய்தே.

(பதவுரை) அ நாள் — பண்டைக் காலத்தே, தொண்டை — அடிமைத் திறத்தை, துகள் தீர செய்யாமல் — ஆணவமலம் நீங்கும் வண்ணம் கைக்கொள்ளாது, துவர் இதழ் — பவளம் போன்ற அதரத்தையும், தொண்டை வாய் — கொவ்வைக் கனி போன்ற வாயை

யும், அல் நாடும் — இருளும் ஆராயத்தக்க, மலர் கூந்தலார்க்கு உடைந்தும் — பூக்களையணிந்த அளகத்தையும் உடைய பெண்கள் பொருட்டு (மனம்) தளர்ந்தேனுயினும், பிழைத்தேன் — உய்ந்தேன், தொண்டையன் நாடு— தொண்டைமானுல் ஆளப்பட்ட தொண்டை மண்டலத்தின் கண்ணே, புகழ் ஓங்கும் — கீர்த்திகள் உயர்கின்ற, முல்லையில் தோன்றும் — திருமுல்லைவாயிலினிடத்தே எழுந்தருளிய, தொண்டு உரு ஐயன் — நவ வடிவத்தையுடைய பிதாவாகிய சிவபிரானுடைய, (கனகசபையிலே) ஆடும் மலர் அடிக்கீழ் — திருநிருத்தஞ் செய்கின்ற செந்தாமரை மலர்போலும் திருவடிக்கீழ், இன்று தொண்டு செய்து — இக்காலத்தே வழிபாடு செய்து. (எ—று)

உய்ந்தேன் என்னும் பயனிலையை இறுதியிற் கூறிக் கொள்க. *(70)*

செய்யுடை யல்குலைக் காட்டி மயக்குநர் தீமைகெடச்
செய்யுடை யல்குலைப் பால்வளை வெண்ணித் திலம்பரப்புஞ்
செய்யுடை யல்குலை யாவள முல்லையிற் சேர்ந்துபகர்
செய்யுடை யல்குலைத்தாராளைப்பால்வைத்த தேவைநெஞ்சே.

(பதவுரை) செய் உடை அல்குலைக் காட்டி — செவ்விய ஆடை சூழ்ந்த அல்குலை (அந்தரங்கத்திலே) காண்பித்து, மயக்குநர் —அறிவைக் கெடுக்கின்ற பெண்கள் (செய்யும்), தீமை கெடச் செய் — தீங்கு நீங்கும் பொருட்டு (முயற்சி) செய்வாயாக, உடையல் — (அம் முயற்சியிலே) தளர்ச்சி அடையற்க, (அம்முயற்சியாவது) குலைப்பால் — வரம்புகளிலே, வளை வெள் நித்திலம் பரப்பும் — சங்குகள் வெள்ளிய முத்துக்களை (உமிழ்ந்து)

நிறைக்கின்ற, செய் உடை — கழனிகளையுடைமையால், உலையா வளம் அல்கு — கெடாத வளப்பம் தங்கிய, முல்லையில் சேர்ந்து — திருமுல்லைவாயிலையடைந்து, செய்யுள் பகர்(தல்) — பாடல்கள் (இயற்றித்) துதித்தலே ஆம், தையல்—உமாதேவியாரையும், கு(ல்)லை தாரானை— துளசி மாலையையுடைய விஷ்ணுவையும், பால் வைத்த தேவை-பாகத்திலே கொண்டருளிய கடவுளை, நெஞ்சே— மனமே. (எ–று)

மனமே! தீங்கு நீங்கும் பொருட்டு முயற்சி செய்; அம்முயற்சியாவது திருமுல்லைவாயிலையடைந்து கடவுளைத் துதித்தலே ஆம் எனக் கூட்டுக. பகர்தல் பகர் எனப் பகுதி மாத்திரையாகி நின்றது. இறுதி அடியில் குல்லை குலை என இடைக் குறைந்து நின்றது. (71)

நெஞ்சல மந்திரங் கக்கூற்றந் தோன்றினு நெக்குருகி
அஞ்சல மந்திரந் தான்முத லாறுமற் றேமறுத்தேம்
சஞ்சல மந்திரம் பெற்றுள முல்லைத் தலத்தழகு
துஞ்சல மந்திரந் தன்னிலெங் கோனைத் துதிக்கப்பெற்றே.

(பதவுரை) நெஞ்சு அலமந்து — (ஆதலால்) மனம் சுழன்று, இரங்க — பரிதபிக்கும் வண்ணம், கூற்றம் தோன்றினும் — இயமன் எதிர்ப்படினும், நெக்கு உருகி அஞ்சலம் — உடைந்துருகி அஞ்சமாட்டோம், மந்திரம் தான் முதல் ஆறும் அற்றேம் — மந்திரம் ஆதியாகிய சடத்துவாக்களின் (பந்தம்) ஒழிந்தோம், சஞ்சலம் அறுத்தேம் — (அப்பந்தங் காரணமாக வரும்) கவலையையும் களைந்தோம், அம் திரம் பெற்று உள — நீர் (வளம்) நிலைபெற்றுள்ள, முல்லை தலத்து—திருமுல்லைவாயிலாகிய

*திருப்பதியில், அழகு துஞ்சல் — அழகு நிலைபேறுடைய, அ மந்திரம் தன்னில் — அந்தத் திருக்கோயிலின்கண் எழுந்தருளியிராநின்ற, எம் கோனை துதிக்கப் பெற்று — நம்முடைய முதல்வராகிய சிவபிரானை வாழ்த்தப்பெற்று. (எ—று)*

*சிவபிரானை வாழ்த்தப் பெற்றுப் பந்தம் ஒழிந்தோம்; கவலை களைந்தோம்; ஆதலால், அஞ்சமாட்டோம் எனக் கூட்டுக. தான்—அசை. சடத்துவாக்களாவன:-மந்திரம், பதம், வன்னம், கலை, தத்துவம், புவனம் என இவை. இறுதியடியில் அம்மந்திரம் எனற்பாலது அ மந்திரம் என நின்றது.* *(72)*

பெற்றத் திருந்துற வாழ்வெமக் கீயப் பெருகுவளம்
முற்றத் திருந்துறு முல்லையின் முல்லையின் முல்லையில்வாழ்
நற்றத் திருந்துறு நீர்வேணி யீர்நள்ளு மன்பரென்னுஞ்
சுற்றத் திருந்துறு கண்டீர்த் தேமைத்தொண்டு கொள்ளுமினே.

*(பதவுரை) பெற்றத்து இருந்து — இடபத்தின் மேல் எழுந்தருளி, எமக்கு உறு வாழ்வு ஈய — எங்களுக்கு (த்தரிசனந்தந்து முத்திப்) பெருவாழ்வைக் கொடுக்கும் பொருட்டு, பெருகு வளம் — (உலகத்தின்) மிகுந்த வளப்பம், முற்றத் திருந்துறும் — முழுவதும் விளங்கப் பெற்ற, முல்லையின் — முல்லை நிலத்தின் கண்ணதாகிய, முல்லையின் — திருமுல்லைவாயிலின்கண், முல்லையில் வாழ் — முல்லைக் கொடி நிழலில் வீற்றிருந்தருளும், தத்து நல் நீர் துறு — தாவுகின்ற சுத்தமாகிய கங்கைநீர் நெருங்கிய, இரும் வேணியீர்—பெருமையாகிய சடையையுடையவரே, நள்ளும் — நேசிக்கின்ற, அன்பர் என்னும் சுற்றத்திர் —*

பத்தர்களாகிய நல்லினங்களையுடையவரே, எமை உந்து—எங்களைத் துரக்கும், உறுகண் தீர்த்து — (வினைத்) துன்பத்தைப் போக்கி, தொண்டு கொள்ளுமின் — அடிமையாகக் கொண்டருளும். (எ—று) (73)

மின்பங்கம் பொன்றுந்து மேருவில் லோடமர் வேதியவென்
றன்பங்கம் பொன்றுந் துறைகாட்டி முத்தியிற் சாரவருள்
அன்பங்கம் பொன்றுந் துபியோசை யென்று மறுமுல்லையாய்
இன்பங்கம் பொன்றுந் துவர்க்கையற் கீந்தரு ளென்னரசே.

(பதவுரை) ஒன்று அம்பு உந்து—(விஷ்ணுவாகிய) ஒரு பாணம் பொருந்திய, மேரு வில்லோடு — மகாமேரு மலை என்னும் வில்லோடும், மின் அமர் பங்கு வேதிய — உமாதேவியார் தங்கிய பாகத்தையுடைய (தேவப்) பிராமணரே, என்றன் பங்கம் — என்னுடைய (மும்மலக்) குற்றம், பொன்றும் துறை காட்டி—ஒழிதற்கு ஏதுவாகிய (சன்) மார்க்கத்தை விளக்கி, முத்தியில் சார—பரமுத்தியில் கலக்கும் வண்ணம், அன்பு அங்கம் அருள்—பரபத்தியையும் (அதற்கு) அங்கமாகிய நல்லொழுக்கத்தையும் கொடுத்தருளும், பொன் — இலக்குமியும், துந்துபி ஓசை-வாத்தியங்களின் முழக்கமும், என்றும் அறு முல்லையாய்—எந்நாளும் நீங்காத திருமுல்லைவாயிலையுடையவரே, கம்பு ஒன்றும் துவர் கையற்கு — சங்கம் பொருந்திய சிவந்த கையையுடைய விஷ்ணுவுக்கு, இன்பம் ஈந்தருள் என் அரசே — ஆனந்தத்தைத் தந்தருளிய என்னுடைய முதல்வரே. (எ—று)

பிராமணரே, உடையவரே, முதல்வரே என அடுக்கி உரைத்துக் கொள்க. (74)

அரங்கந் திருவம் பலமுக்க ணுனுக் கமர்விடஞ்சீர்
இரங்கந் திருவம் பலர்தோறும் வாழ விலங்கும்பிர
மரங்கந் திருவம் பலபாடும் வாவிகண் மல்குமுல்லைப்
புரங்கந் திருவம் பலங்குங் கோடியிடைப் பூண்முலையே.

*(பதவுரை)* முக்கணனுக்கு — மூன்று கண்களை யுடைய சிவபிரானுக்கு, அரங்கம் — (திருநிருத்தம் செய்யும்) சபை, திரு அம்பலம் — (தில்லைப்பதியிடத்ததாகிய) அழகிய கனகசபையே, அமர்வு இடம் — எழுந்தருளியிருக்கும் இடம், இரங்குசீர் — (யாவரும் எடுத்து) முழக்கும் சிறப்பினையுடைய, திருவாழ இலங்கும் — இலக்குமி தங்கும்படி விளங்குகின்ற, அம் வம்பு அலர்தொறும் — அழகும் மணமும் பொருந்திய செந்தாமரை மலர்கள் தோறும், பிரமரம்—வண்டுகள், கந்திருவம் பல பாடும்— கந்தருவம் முதலிய பலவகைப் பண்களைப் பாடப்பெற்ற, வாவிகள் மல்கு — தடாகங்கள் மிகுந்துள்ள, முல்லைபுரம் —திருமுல்லைவாயிலென்னும் திருப்பதியே, கந்து—பற்றுக் கோடு, வம்பு அலங்கும்—கச்சின்மேல் விளங்கும், பூண் இருமுலைக்கொடியிடை—ஆபரணங்களை யணிந்த இரண்டு தனங்களையுடைய கொடியிடையம்மையே. (எ—று)

(75)

பூண்டிலஞ் சித்தத்து மெய்யன்பேவ் வாறினிப் போன் [பெண்மணனாந்
தூண்டிலஞ் சித்தத் துவங்கடந் தானந்தந் தோய்வுறலார்
பாண்டிலஞ் சித்தத் துவாத்துடக் கோக்கப் பறித்தருள்வாய்
ஆண்டிலஞ் சித்தத்து நீர்புடை சூழ்முல்லை யங்கணனே.

*(பதவுரை)* சித்தத்து — (யாங்கள்) மனதின் கண்ணே, மெய் அன்பு பூண்டிலம் — மெய்ப்பத்தியைக்

கொண்டிலோம், இனி எவ்வாறு — இனி எப்படி, பொன் பெண் மண் ஆம்—பொன்னும் பெண்ணும் மண்ணும் ஆகிய, தூண்டில் அஞ்சி—தூண்டிலுக்குப்பயந்து, தத்துவம் கடந்து — (மாயாகாரியமாகிய) கருவிகளைநீங்கி, ஆனந்தம் தோய்வுறல் — (உமது திருவடி) இன்பப் பெருக்கின் மூழ்குதல், அம் பாண்டில் ஊர்சித்து—அழகிய இடபவாகனத்தைச் செலுத்துகின்ற ஞானமூர்த்தீ, அத்துவாத் துடக்கு — (ஆதலால் நீர் குருமூர்த்தியாகி எழுந்தருளிச் சிவதீக்கை செய்து) சடத்துவாக்களின் பந்தம், ஒக்கப் பறித்து — முழுவதூஉம் களைந்து, ஆண்டருள்வாய்-(அப்பத்தி முத்திகள் சித்திக்கும்பொருட்டு) அடிமை பூண்டருளும, தத்துநீர் இலஞ்சி — தாவுகின்ற நீரையுடைய தடாகங்கள், புடை சூழ்—புறத்தே சூழும், முல்லை அம் கணனே — திருமுல்லை வாயிலையுடைய அருட் கண்ணரே. (எ—று)

ஞானமூர்த்தீ அருட்கண்ணரே என்பவைகளை முதலின் ஓதிக்கொள்க. தூண்டில் இவ்விடத்தே அறிவைக் கவருங் கருவி. (76)

அங்கங் கரகர வென்றோதம் போலொலி யார்ப்பவன்பர்
சங்கங் கரகர கத்தோர் துதிக்கத்தண் ணீற்றிஞெளி
பொங்கங் கரகர முல்லையுள் ளாரெனைப் போத்திக்கொண்ட
பங்கங் கரகர நின்று லுனைப்பற்றிக் கொல்லுவரே.

(பதவுரை) அங்கு அங்கு ஓதம் போல் — அங்கங்கே கடல்போல, அன்பர் அரஅர என்று ஒலி ஆர்ப்ப— பத்தர்கள் அரகரவென்று பெருமுழக்கஞ் செய்யவும், கரகம் சங்கம் கரத்தோர் துதிக்க — கமண்டலத்தையும்

சங்கையும் (முறையே) கைகளிற்கொண்ட பிரமாவும் விஷ்ணுவும் (வேதசிவாகமங்களை எடுத்து) ஓதவும், தண் ணீற்றின் ஒளி பொங்கு அங்கர் — தண்ணிய திருநீற்றினது விளக்கம் மிகுந்த திருமேனியையுடையவராகிய சிவபெரு மான், முல்லை அகரம் உள்ளார் — திருமுல்லைவாயில் என் னும் திருப்பதியின்கண் எழுந்தருளியிருக்கின்றார், (ஆத லால்) எனை பொத்திக் கொண்ட பங்கம்—என்னை மூடிக் கொண்ட (ஆணவ மலமாகிய) களங்கமே, கரகர — ஒளித்துவிடு ஒளித்துவிடு, நின்றால் உனை பற்றிக் கொல்லுவர் — தங்கி நிற்பாய் ஆயின் உன்னை அகப்படுத்திக் கொன்றுவிடுவர். (எ—று)

அன்பர் சங்கம் கர கரகத்தோர் என்பதற்கு அன்பர் குழாமும் கையிலே கமண்டலத்தையுடைய முனிவரும் எனப் பொருள் கூறலும் ஒன்று. (77)

பற்றிக்கோல் லாதொழி வேனோ வினிமலப் பாவமறங்
கற்றிக்கோல் லாருலை வேற்கண்ணி பால்கவர் முல்லைப்பிரான்
பெற்றிக்கோல் லாதவர் போலென் றனையெண்ணும்
[பேதையெண்ண
முற்றிக்கோல் லாம்வரு கின்றனை பாரின்றேன்
[முன்னர்வந்தே.

(பதவுரை) மல பாவம் — மூலமாகிய பாதகமே, இனி பற்றி கொல்லாது ஒழிவேனோ — இனி (உன்னை) அகப்படுத்திக் கொல்லாமல் விடுவனோ, மறம் கற்று — கொல்லுந் தொழிற் கண்ணே பழகி, இ கொல் உலை ஆர்— இந்தக் கொல்லன் உலைமுகத்திற் காயப்பெற்ற, வேல் கண்ணி பால் கவர் — வேல் போலும் கண்களையுடைய

உமாதேவியாரது பாகத்தைக் கவர்ந்து, முல்லை பிரான் — திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கும் முதல்வருடைய, பெற்றிக்கு ஒல்லாதவர்போல்—திருவருள் நீர்மைக்குப் பொருந்தாத அனபர் போலும், என்றனை எண்ணும் பேதை எண்ணம்-என்னை நினைக்கின்ற மடமைக் கருத்து, முற்றிக்கொல்லாம் வருகின்றனை — முதிர்ந்தல்லவா (இது வரையும் தொடர்ந்து) வருகின்றாய், இன்று என் முன்னர் வந்து பார் — இப்பொழுது (அச்சிவபிரானுடைய பெருங் கருணை பெற்ற என் முன்னே வந்து பார்ப்பாயாக. (எ—று) (78)

வந்தியன் றேவரை நின்னன்றி யான்முல்லை வாணவென்றோ
வந்தியன் றேவரை யாதரு ளாமைமண் முற்றும்பெற்றும்
வந்தியன் றேவரை மாமாது நீயுமவ் வாறுநின்சேவ்
வந்தியன் றேவரை வாட்கரித் தான்கேட வைத்தவனே.

(பதவுரை) முல்லை வாண—திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற சிவபிரானே, நின் அன்றி — (பதியாகிய) உம்மையல்லது, தேவரை — (பசுக்களாகிய) தெய்வங்களை, யான் வந்தியன்—நான் வணங்கமாட்டேன், வரையாது — (ஆதலால் அடியேனைத்) தள்ளிவிடாது, இயன்றே வந்து—(திருவுளம்) பொருந்தியே எழுந்தருளி, அருளாமை என்னோ — கருணை செய்யாமை என்னையோ, மண் முற்றும் பெற்றும்—பிருதிவி (முதலிய சடமும் சித்தும் ஆகிய பிரபஞ்சங்களை) யெல்லாம் பெற்றருளியும், மா வரை மாது — மகிமை பொருந்திய பார்ப்பதி தேவி, வந்தி அன்றே—பெறாத கன்னிகை யல்லவா, நீயும் அவ்வாறு — (அப்பார்ப்பதி தேவிக்குத் தலைவராகிய) நீரும் பிரமசாரியே, நின் செவ்வந்தி—உமது (திருமேனிப்

பாங்காகப்பெற்ற) செவ்வந்தி மலர்களை, அன்றே—முற்காலத்தே, வரைவாட்கு அரித்தான்—தன்னுடையமனைவி (சூடும்) பொருட்டு(த்திருச்சிராப்பள்ளியிலே) முற்றுங் கவர்ந்த பராந்தகச் சோழனை, கெட வைத்தவனே—அழியும்படி செய்தவரே. (எ—று)

சிவபிரானே! பிரமசாரியே! செய்தவரே! என அடுக்கி உரைக்க. மண்—உபலக்கணம். (79)

## நற்றுயிரங்கல்.

வைத்தலை வாளி நிகர்விழி யான்மத னம்புடல்சு
வைத்தலை வாளினி யாற்றகில் லாண்மன்னச் செய்தியருள்
வைத்தலை வாளினி தார்முல்லை வாண மதிக்குடைக்கோ
வைத்தலை வாளினி லேற்றன்றிச் சாந்தம் வராதிவட்கே.

(பதவுரை) வை தலை வாளி நிகர் விழியாள்—கூரிய நுனியையுடைய அம்புபோலும் கண்களையுடைய என்னுடைய பெண்ணானவள், மதன் அம்பு — மன்மதனுடைய பாணங்களாலே, உடல் சுவைத்து —(தனது) உடம்பு (முழுவதும் புண்ணாகத் துளைத்து) உண்ணப்பட்டு, அலைவாள்—சுழலுகின்றாள், இனி ஆற்றகில்லாள் — இனிப் பொறுக்கமாட்டாள்போலும், (ஆதலால்) அருள்வைத்து —கருணைசெய்து, மன்னச்செய்தி —(அங்கீகரித்து அவளறிவு) நிலைபெறும்படி செய்தருளும், (அ(ல்)லை இனிது ஆர்—இருளை இனிதாக உண்ணுகின்ற, வாள் முல்லைவாண—ஒளியையுடைய திருமுல்லை வாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானே, மதி குடை—சந்திரனாகிய குடையையுடைய, கோ தலையை—அரசனாகிய அம்

மன்மதனது தலையை, வாளினில்,ஏற்று அன்றி — வாளாயுதத்தால் வீசிறலல்லது, இவட்கு சாந்தம் வராது — இவளுக்கு ஆறுதல் உண்டாகாது. (எ—று)

சிவபெருமானே! என்பதை முதலின் எடுத்தோதிக் கொள்க. மூன்றாமடியில் அல்லை அலை என இடைக் குறைந்து நின்றது. (80)

**பாங்கி, தலைமகளதவயவத் தருமை சாற்றல்.**

**வட்காத கைதவ ரூரெரித் தாயுன்னை வாஞ்சித்தவி**
**வட்காத கைதவ மிக்கோர் புகழ்மணி வார்த்தைநிறை**
**உட்காத கைதவ வாணர்கள் வாழ்முல்லை யுத்தமனே**
**உட்காத கைதவன் கைப்பிரம் பாலடி யுண்டவனே.**

(பதவுரை) வட்காத — கெடுதலில்லாத, கைதவர் ஊர் — வஞ்சகத்தையுடைய பகைவருடைய நகரங்களை, எரித்தாய் — தகித்தவரே, உன்னை வாஞ்சித்த இவட்கு— உம்மை விரும்பிய இத் தலைவிக்கு, தகையா—அழகா, தவ மிக்கோர் புகழ்—மிக்கது ஆகும் (புலமையின்) மேலாயினோர் துதிக்கின்ற, வார்த்தை (யா) மணி—சொல்லா மாணிக்கமாகும் (ஆதலால் அங்கீகரித்தருளும்), நிறை உட்காத—மகிமை குன்றாத, கைத் தவ வாணர்கள் வாழ்— ஒழுக்கத்தையுடைய தவத்தினர் வாழ்கின்ற, முல்லை உத்தமனே — திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கும் முதல்வரே, உட்காத கைதவன் — அஞ்சாத பாண்டிய ராசனது, கை பிரம்பால் அடியுண்டவனே—கையிலுள்ள பிரப்பங்கோலால் அடிபெற்றவரே. (எ—று)

*திருநாமங்களை அடுக்கியுரைத்துக் கொள்க. ஆதலால், அங்கீகரித்தருளும் என்பது இசை எச்சம். மூன்றாமடியில் கைத்தவம் எனற்பாலது கைதவ எனத் தகர ஒற்றுத் தொக்கு நின்றது.* *(81)*

உண்டாயி னந்த மயல்செய்வ தென்னினி யோடுநஞ்ச,
முண்டாயி னந்தம தாண்டவன் முல்லை யுறுருறும்புன்
கண்டாயி னந்தமர் போல்வந்தெம் மான்கண்ணருள்புரிந்தான்
கண்டாயி னந்தம மேயுனக் கீங்கென்ன காரியமே.

*(பதவுரை) உண்டாயின் — (என்னோடு) பிறந்தாயானால், நந்த—(யான்) கெடும் வண்ணம், மயல் செய்வது என் — (நீ) மயக்கம் செய்தல் என்னை, இனி ஓடு — இப்பொழுதே ஓடக் கடவாய், நஞ்சம் உண் — விடத்தை உண்டருளிய, தாயின் — மாதாவைப் போலும் (கருணை மிகுந்து தேவரைக் காத்தருளிய), நம் தமது ஆண்டவன்— நம்முடைய (அம்) முதற்கடவுளது, முல்லை உறுர் உறும்— திருமுல்லைவாயிலை அணுகாதவர் அடையத்தக்க, புன்கண் தாயினம் — துன்பங்களைக் கடந்தோம், எம்மான்—எம்முடைய பெரியராகிய சிவபிரான், தமர்போல் வந்து—(மாநுடச் சட்டைசாத்தி) உறவினர்போல எழுந்தருளி, அருட்கண் புரிந்தான் கண்டாய் — திருவருட் பார்வை செய்தருளினர் அல்லவா, (ஆதலால்) தமமே — இருண்ட ஆணவமலமே, இனம் உனக்கு — இன்னமும் உனக்கு, ஈங்கு என்ன காரியம் — இவ்விடத்தே என்ன காரியம் இருக்கின்றது. (எ—று)*

*சிவபிரான் திருவருள் செய்தருளினர்: ஆதலால், துன்பங்களைக் கடந்தோம். ஆணவமலமே என்னோடு பிறந்*

தாயானால் மயக்கம் செய்தல் என்னை? ஓடக் கடவாய்: இன்னமும் என்ன காரியம் இருக்கின்றது எனக் கூட்டுக. (82)

மேதக்க சிந்தனைத் தாபதர் வாழ்முல்லை மேவுநம்ப
வாதக்க சிந்தனைத் தாவீர மென்றட்டு மன்மதனைக்
காதக்க சிந்தனைத் துங்குடி யார்முடிக் கண்ணுதலென்
றோதக்க சிந்தனைக் கென்னெஞ்ச மேகுறை யோதுதியே.

(பதவுரை) மேதக்க—மேம்பட்ட, சிந்தனை — (திருவடித்) தியானத்தையுடைய, தாபதர் வாழ் — துறவிகள் வாழும், முல்லை மேவு நம்ப — திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற நம்பன் என்னும் திருநாமத்தை யுடையவரே, தக்க சிந்தனை — தகுதியுடைய குறள் வடிவினனாகிய விஷ்ணுவை, வா வீரம் தா — வருவாயாக (உனது) வலிமையைத் தருவாயாக, என்று அட்டு—என்று சொல்லி அழித்து, மன்மதனை காது அக்க — மன்மதனை எரித்துக் கொன்ற (அக்கினிக்) கண்ணையுடையவரே, சிந்து அனைத்தும் — கங்கையாறு முழுவதும், குடி ஆர் — தங்கப் பெற்ற, முடி கண்ணுதல் என்று — திருமுடியை யுடைய சிவபிரானே என்று, ஓத — (திவ்விய நாமங்களை) எடுத்துப் புகழ்ந்த மாத்திரையில், கசிந்தனைக்கு—உருகிய உனக்கு, நெஞ்சமே குறை என் ஓதுதி — மனமே குற்றம் ஏது சொல்லுவாயாக. (எ—று) (83)

துதிப்பருந் தாதவிழ் பூம்பொய்கை சூழ்முல்லைத்
தொன்னகர்வாழ்
மதிப்பருந் தாதகி கொன்றைச் சடாதர வாணியங்குந்

கதிப்பருந் தாதர வாயென் னுடம்பிற் கசியும்புலாற்
குதிப்பருந்தாதமுன்வந்தென்றனைத்தொண்டுகொண்டருளே.

(பதவுரை) துதிப்பு அரும் — புகழ்தற்கரிய, தாது அவிழ் — இதழ்கள் விரிந்த, பூம் பொய்கை சூழ் — பூக்களையுடைய வாவிகள் சூழ்ந்த, முல்லை தொல் நகர் வாழ் — திருமுல்லைவாயில் என்னும் பழைய திருப்பதியின்கண் எழுந்தருளியிராநின்ற, மதி — சந்திரனையும், பரும் தாதகி — பெரிய ஆத்திப் பூமாலையையும், கொன்றை — கொன்றைப் பூமாலையையும் அணிந்த, சடாதர — சடையையுடையவராகிய சிவபெருமானே, வான் இயங்கும் — ஆகாயத்திற் சஞ்சரிக்கின்ற, கதி பருந்து — நடையுள்ள பருந்தானது, என் உடம்பின் கசியும் — என்னுடைய உடலினின்றும் வழிகின்ற, புலால் ஆதரவாய் — ஊனை விருப்பமாக, குதிப்பு அருந்தாத முன் வந்து — பாய்தலுற்றுப்புசிக்கு முன்னமே எழுந்தருளி, என்றனை தொண்டு கொண்டருள் — என்னை அடிமை பூண்டருளும். (எ—று) (84)

அருந்துதி யானன்பி னேத்தவைத் தாரருள் கற்பினல
மருந்துதி யானம் புவிக்களித் தாரரு ளாரமுதை
அருந்துதி யானம் புரிமன மேவிரைந் தாள்வரெம்மை
யருந்துதியானன்கவர்முல்லைக்கேசொல்லுமவ்வெண்ணமே.

(பதவுரை) அரும் துதி — அருமையாகிய (தேவார முதலிய) தோத்திரங்களை, யான் அன்பின் ஏத்த — அடியேன் பத்திமையோடு எடுத்தோதும் பொருட்டு, அருள் வைத்தார் — கருணை செய்தவரும், கற்பின் நலம் — கற்பினது நன்மையை, அருந்துதி யான் — அருந்ததி முகமாக, அம்புவிக்கு அளித்தார் — அழகிய பூவுலகத்திற்குக்

*கொடுத்தவருமாகிய சிவபிரானுடைய, ஆர் அருள் அமுதை — நிறைந்த அருளாகிய அமிர்தத்தை, அருந்து— புசித்தற்கு (உரிய), தியானம்புரி — தியானம் செய்யக் கடவாய், (அங்ஙனம் செய்தால்) மனமே — நெஞ்சமே, எம் ஐயர் — நம்முடைய (அக்) கடவுள், விரைந்து ஆள்வர் — விரைவில் எழுந்தருளி அடிமை பூண்டருளுவர், (ஆகையால்) நன்கு — நன்மையாக, அவர் முல்லைக்கே செல்லும் — அச்சிவபெருமானது திருமுல்லைவாயிலுக்கே செல்லுகின்ற, அவ் எண்ணம் உந்துதி ஆல் — அக்கருத்தினைச் செலுத்துவாயாக. (எ—று)*

*இரண்டாமடியில் அருந்தற்கு அருந்துதி என மரீஇயிற்று. நான்காமடியில் ஆல் அசை. (85)*

எண்ணப் படிகடி யாதன்பர்க் கீந்தெழின் முல்லையினுங்

கண்ணப் படிகடி யானத்துந் தோன்றுமிக் கான்கழற்கீழ்

நண்ணப் படிகடி நெஞ்சே யவனம் பிழையெண்ணினும்

தண்ணப் படிகடி தாறுதல் போலுமத் தன்மையனே.

*(பதவுரை) கடியாது — தள்ளிவிடாமல், எண்ணப் படி — எண்ணிய வண்ணம், அன்பர்க்கு ஈந்து — பத்தர்களுக்குக் கொடுத்தருளி, எழில் முல்லையினும் — அழகையுடைய திருமுல்லைவாயிலின்கண்ணும், கண்ணப்ப அடிகள் — கண்ணப்பசுவாமிகளுடைய, தியானத்தும் தோன்றும் மிக்கான் — (அத்துவித) பாவனையின் கண்ணும் வெளிப்பட்டருள்கின்ற மேலானவருடைய, கழல் கீழ் நண்ண—திருவடி (வியாபகத்தில்) வியாப்பியமாகக் கலக்கும் பொருட்டு, படி கடி நெஞ்சே — (உண்மை நிட்டையைக் குருமுகமாகப்) பயிற்சி செய்வாயாக விளக்க*

முள்ள மனமே, அவன் நம் பிழை எண்ணினும் — அச் சிவபிரான் (இதுவரை வீணாகப் போக்கிய) நம்முடைய குற்றங்களைத் திருவுளத்துக் கருதினும், தண் அப்பு அடி — குளிர்ந்த நீரில் அடிக்கப்பட்ட வடு, கடிது ஆறுதல் போலும் — விரைவிலே ஒழிதல் போல, அ தன்மையனே — (கருணை செய்கின்ற) அவ்வருளுடையவரே ஆவர். (எ—று)

கண்ணப்ப அடிகள் கண்ணப்படிகள் என நின்றது.

(86)

அத்தன்மை யாந்தெரி யற்குழ லாரமர் முல்லைநில
யத்தன்மை யாந்தெரி மூழ்காம லுண்மை யருவுருக்கா
ரத்தன்மை யாந்தெரி யக்குரு வாய்வந் தனைத்துமல்லா
வத்தன்மை யாந்தெரி வைபாகத் தாமறி யேன்றனனே.

(பதவுரை) அத்தன் — பிதாவும், தெரியல் மை ஆம் குழலார்—மலர் மாலையணிந்த கருமையாகிய கூந்தலையுடைய மங்கையர், அமர்—தங்கப்பெற்ற, முல்லை நிலயத்தன் — திருமுல்லைவாயிலின்கண்ணதாகிய திருக்கோயிலையுடையவருமாகிய சிவபிரான், மையாந்து — (சிறியேன் உலக இயலில்) சுழன்று, எரி மூழ்காமல் — எரிவாய் நிரயத்திலே அழுந்திவிடாது, அருக் காரத்து உரு உண்மை— (கன்மத்துக்கீடாகக் கூட்டுவித்த) தத்துவமாகிய (மாயா) காரியத்தினது சொரூப உண்மையும், அல் மை ஆம் தெரிய—(இருண்ட ஆணவமலத்தினது சொரூப உண்மையும்) அறியும் பொருட்டு, குரு ஆய் வந்து — குருமூர்த்தியாகி எழுந்தருளி (அறிவித்து), அனைத்தும் அல்லா அ தன்மை ஆம் — (எழுத்துக்கள்) எல்லாம் (ஆகியும்)

ஆகாத அகரத்தின் இயல்பு (போல உலகெலாமாகியும் வேருகிய அகளவடிவை) உடையாம், தெரிவை பாகத்தாம் — (உயிர்களுக்குப் போகமும் விடு பேறும் கொடுக்கும் பொருட்டு) பராசத்தியைப் பாகத்திற் (கொண்ட சகளவடிவையும்) உடையாம், அறி என்றனன் — உணர்வாயாக என்று (பதியாகிய தம்முடைய சிறப்புருவம் பொதுவுருவங்களையும் முறையே) உபதேசித் தருளினர். (எ—று)

ஆதலால் அப்பெருமானுடைய கருணை இருந்தபடி என்னை என்பது எஞ்சி நின்றது. (87)

புறங்காட்டல்.

அறிவென் றவவழிச் செல்லார் தமையு மடக்குங்கண்ணய்
குறிவென் றவவடி யேற்களித் தாயிணைக் கூற்றின்மையாற்
பொறிவென் றவவர் பெறும்பேற்றை யொக்குமிப் பொன்னு
ருவைச், செறிவென் றவவலி யென்றேவேம் மான்முல்லைத்
தீங்கரும்பே.

(பதவுரை) அறிவு என்று அவவழி செல்லார் தமையும் — அவ (மாகிய உலக) வழியில் செல்லுதலை அறிவு என்று கொள்ளாத அறிஞரையும், அடக்கும் கண்ணய்— அகப்படுத்துகின்ற கண்ணையுடையவளே, குறி வென் — (நீ) குறித்த முதுகாகிய புறத்தை, தவ — மிகவும், அடியேற்கு அளித்தாய்—எளியேனுக்குத் தந்தருளினை, இணை கூறு இன்மையால் — சமமாகிய கூறுபாடு இல்லாமையினுல், பொறி வென்ற — இந்திரிய நிக்கிரகம் செய்த, அவர் பெறும் பேற்றை ஒக்கும் — அத்துறவிகளால்

அடையத்தக்க (முத்திப்) பயனைப் போலும், இ பொன் உருவை — இப்பொன் போன்ற சரீரத்தை, செறிவு — அணைதற்கு, தவ வலி என் என்றே — (இவனுக்குத்) தவ வலிமை யாதுளது என்று கருதியோ, எம் மான் — எம்பெருமானுடைய, முல்லை தீங் கரும்பே — திருமுல்லை வாயிலின்கண் இருக்கும் இனிய கரும்பு போல்பவளே. (எ-று)

கண்ணையுடையவளே! கரும்பு போல்பவளே! சமமில்லாமையினால் அணைதற்குக் கருதியோ நீ தந்தருளினை எனக் கூட்டுக. (88)

கருப்பந்தங் குங்குறி யான்முல்லை வாண கதிகடோறுந்
திருப்பந்தங் குங்கு மலமரல் போன்று தெரிவையரைப்
பொருப்பந்தங் குங்குமக் கொங்கையென் றேதிப்பொய்
யாதொழிப்பாய், உருப்பந்தங் குங்குலி யக்கல யன்றேமு
முத்தமனே.

(பதவுரை) முல்லை வாண — திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானே, கருப்பம் தங்கும் குறியால் — (திரும்பவும்) கருப்பத்திற் பொருந்துதற் கேதுவான (தீய) கருத்தால், கதிகள் தொறும் — தேவகதி மானுடகதி மிருககதி நரககதியாகிய நாற்கதிகளினும், திரு பந்து — அழகிய பந்து, அங்கு உங்கும் அலமரல் போன்று — அவ்விடத்தும் உவ்விடத்தும் சுழலுதல் போல (ச்சுழன்று), தெரிவையரை — பெண்களை, பொருப்பு அந்தம் — மலைபோலும் அழகையுடைய, குங்குமக் கொங்கை என்று ஓதி — செஞ்சாந்தணிந்த தனங்களையுடையாரென்று புகழ்ந்து, பொய்யாது — பொய்ம்மையுடையேனை

காது,' உரு பந்தம் ஒழிப்பாய் — தேகபந்தத்தை விடுவித் தருளும், குங்கிலியக் கலயன் தொழும் உத்தமனே— குங்குலியக் கலய நாயனாரால் வழிபடப் பெற்ற முதல் வரே. (எ–று)

சிவபெருமானே! முதல்வரே! எனவும், சுழன்று என்ற தன்பின் திரும்பவும் கருத்தால் எனவும் உரைத்துக் கொள்ள. குங்குமக்கொங்கை — அன்மொழித்தொகை.

(89)

தமக்கடி யாகமை யொன்றித் தவஞ்செய்யுந் தன்மையிலா
தமக்கடி யாக முதவாரைச் சாரத் தகுமுனக்குத்
தமக்கடி யாக மறையாளர் முல்லைத் தலத்திறைவர்
தமக்கடி யாகமெய்த் தொண்டுசெய் வேங்களைச் சார்வரிதே.

(பதவுரை) தம கடியா—இருள் வடிவாகிய ஆணவக் கொடியாய், கமை ஒன்றி—(துறவறத்தினின்றும் துன்பங் களைப்) பொறுத்தலாகிய குணத்தைப் பொருந்தி, தவம் செயும் தன்மை இலாத மக்கள்—தவங்களைச் செய்கின்ற இயல்பில்லாத மாநுட(ப்பத)ரையும், தியாகம் உத வாரை—(இல்லறத்தினின்றும் துறவறத்தாருக்கு உணவு முதலிய) கொடுத்தலை உபகரியாதவ(ராகிய பாமர)ரை யுமே, சார உனக்கு தகும்—பந்திக்க உனக்கு அருகமாகும், உத்தம கடி யாகம் மறையாளர் — மேம்பட்ட விளக்க முள்ள வேள்விகள் (செய்கின்ற) பிராமணர்களுடைய, முல்லை தலத்து இறைவர் தமக்கு — திருமுல்லைவாயிலாகிய திருப்பதிக்கு முதல்வராகிய சிவபெருமானுக்கு, அடியாக— (பிறவிகள் தோறும்) அடிப்பாடாக, மெய் தொண்டு

செய்வேங்களை—மெய்ப் பணிகளைச் செய்கின்ற எங்களை, சார்வு அரிது-பொருந்துதல் (உனக்கு) அருகமல்ல. (எ—று)

தமக்கடியா என்பதனை இயமன் மேலேற்றிப் பொருள் கூறினும் பொருந்தும். (90)

## நற்றாய் கூற்று.

சார்வருந் திப்பிய மால்கொள்வ தென்னை தண்முல்லைநகர்ச்
சார்வருந் திக்குடை யார்செயல் கேட்டி தகுவர்கடம்
ஊர்வருந் திக்கெடப் புன்முரல் கொள்ளுவ ரோரேருதை
ஊர்வருந் திப்புனல் சூடுவ ராடுவ ரோண்ணுதலே.

(பதவுரை) சார்வு அரும்-(ஆதலால் இத்தன்மை யுடையாரிடத்தே) அடைதற்கரிய, திப்பியம் மால் கொள்வது என்னை—மிக்க ஆசை கொள்ளுதல் யாது காரணம், தண் முல்லை நகர்—தண்ணியநீர் சூழப்பெற்ற திருமுல்லை வாயிலென்னும் திருப்பதியின் கண்ணே, சார்வரும் திக்கு உடையார்—(பவனி) வருகின்ற திக்குகளை வஸ்திரமாகக் கொண்டவராகிய மாசிலாமணி யீசருடைய, செயல் கேட்டி—சரிதங்களைக் கேட்பாயாக, தகுவர்கள் தம் ஊர்—அசுரர்களுடைய முப்புரங்களும், வருந்தி கெட— துன்பப்பட்டுக் கெடும் பொருட்டு, புன்மூரல் கொள்ளுவர்—இளநகை செய்தவர், ஓர் எருதை ஊர்வர் — ஒன்றாகிய இடபத்தைச் செலுத்துபவர், உந்தி புனல் சூடுவர் — கங்கையாற்று நீரைத் (திருமுடியிலே) தரிப்பவர், ஆடுவர் — (மயானத்தின் கண்ணே) திருநடம் செய்பவர், ஒள் நுதலே — அழகிய நெற்றியையுடைய பெண்ணே (எ—று).

*பெண்ணே என முதலினும், ஆதலால் ஆசைகொள்ளு தல் யாது காரணம் என இறுதியினும் கூறிக்கொள்க. தண் ஆகுபெயர். ஒண்ணுதல் அன்மொழித்தொகை.*
*(91)*

ஒண்ணுத லங்கனை மாரிடந் தோறு முவந்துநடம்
பண்ணுத லங்கலை யக்குழைத் தார்முல்லைப் பாடியினை
அண்ணுத லங்கனை யானைத் தொழலிவை யன்றிநெஞ்சின்
கண்ணுத லங்கனை முந்நீ ருலகிற் கருமங்களே.

*(பதவுரை) இடந்தோறும்—அரங்கங்கள் தோறும், ஒள் நுதல் அங்கனைமார்—ஒளி பொருந்திய நெற்றியை யுடையபெண்கள், உவந்து நடம் பண்ணுதல்—மன மகிழ்ந்து நடனம் செய்கின்ற ஒலியானது, அம் கல் லையை குழைத்து ஆர்—அழகிய கல்லும் உடையும் வண்ணம் குழைத்து நிரம்பப் பெற்ற, முல்லை பாடியினை அண்ணு தல்—திருமுல்லைவாயிலை அடைதலும், அங்கு—அவ் விடத்தே எழுந்தருளியிருக்கின்ற, அனையானை தொழல்— தாய்போலும் (கருணையுடைய) சிவபெருமானை (விதிப்படி) வழிபடுதலும் ஆகிய, இவை அன்றி—இச்சிவதன்மங்களை யல்லது, கனை முந்நீர் உலகின்—முழங்குகின்ற கடலாற் சூழப்பட்ட உலகத்தின்கண்ணே, கருமங்கள்—(பிறி தொரு) கருமங்களை, நெஞ்சின்கண் நுதலம்—மனசிலே நினைத்தலும் செய்யாம். (எ—று)*

*பண்ணுதல் ஆகுபெயர். மூன்றாமடியில் அன்னை அனை என இடைக்குறைந்து நின்றது.* *(92)*

மங்கள மேவியன் முல்லைப் பிரானின்று வைத்தனன்கா
மங்கள மேவிய ஞட்டத் தவர்போய் மலமதங்கன்

மங்கள மேவிய செய்தேனை வாட்டு மனமினிநீ
மங்கள மேவிய புன்புதன் மான வலியிழந்தே.

(பதவுரை) முல்லை பிரான் — திருமுல்லை வாயிலையுடைய கடவுள், வியன் — மேம்பட்ட, மங்களமே — (நித்திய) மங்களத்தையே, இன்று வைத்தனன் — இப்பொழுது (எனக்குச்) செய்தருளினூர், (ஆதலால்) காமம் கள் — ஆசையும் கள்ளும், ஏ இயல் நாட்டத்தவர் — அம்பை யொத்த தன்மையுள்ள கண்களையுடைய பெண்களிடத்து, பொய் மலம் மதம் கல் மம் களம் — (செய்கின்ற) பொய்யும் பாவமும் செருக்கும் தீயதொழிலும் வஞ்சகமும் ஆகியவற்றை, மேவிய செய்து — விரும்பச்செய்து, எனை வாட்டும் மனம் — என்னை வருத்திய நெஞ்சமே, இனி அளம் மேவிய — இனி உப்பளத்தைச் சேர்ந்த, புன் புதல் மான — சிறிய துரும்புபோலும், வலி இழந்து — வலிமை கெட்டு, நீ மங்கு — நீ மங்குவாயாக (எ — று) (93)

இழவாதென் போத மிழப்பித்த முல்லைக் கிறையவனைத்
தொழவாதென் போதகங் கைக்கொண்டேன் றன்மைத்
[துரிசுகளின்
உழவாதென் போதமெய் யன்புசெய் வீணி லுழலுமிந்தப்
பழவாதென் போதவிர் நெஞ்சே யுனக்கிது பண்பல்லவே.

(பதவுரை) இழவாது — (பசுவாகிய என்னை) இழக்காமல், என் போதம் இழப்பித்த — என்னுடைய பசுத்துவத்தை இழக்கும் வண்ணம் செய்தருளிய, முல்லைக்கு இறையவனை — திருமுல்லைவாயிலுக்குத் தலைவராகிய சிவபெருமானை, தென் போது அகங்கை கொண்டு — அழகிய

மலர்களை உள்ளங்கையிலே ஏந்திக்கொண்டு, தொழவா—(மந்திரக் கிரியா பாவனைகளோடு பூசித்து) வழிபடும் பொருட்டு வருவாயாக, என் தன்மை துரிசுகளின் — என்னுடைய பசுத்துவ வாசனைக் குற்றங்களின் (வழியே போய்), உழவாது — வருந்தாமல், என்பு ஓத மெய் அன்பு செய்—என்பும் உருகியுணர்ந்தச் சற்பத்தி செய்வாயாக, வீணில் உழலும் — வம்பாகச் சுழலுகின்ற, பழ இந்த வாது என் — பழமையாகிய இந்த (உலக) விவகாரம் யாது பயன் தரும், (ஆதலால்) நெஞ்சே போ — மனமே (என்னை விட்டு) நீங்கு, (அல்லது) தவிர்—விவகாரத்தை ஒழி, இது உனக்கு பண்பு அல்ல—இது (வன்றி மறுதலைப் பட ஒழுகுதல்) உனக்கு முறையன்று. (எ—று)

மூன்றுமடியில் ஓத என்பது உபசார வழக்கு. (94)

அல்லாக்கு மாரிரு ணெஞ்சே தொழும்பர்க் கடித்தொழில்செய்
அல்லாக்கு மாரியென் றேத்தே லகிலமு மீன்றுமுதிர்
வல்லாக்கு மாரிதன் பங்காள னீல வரங்கமெல்லை
யல்லாக்கு மாரிய முல்லைப் பிரானடிக் கன்புசெய்யே.

(பதவுரை) அல்லாக்கும் — (விடயங்களிற்)சுழலுகின்ற, இருள் ஆர் நெஞ்சே — மடமை நிறைந்த மனமே, தொழும்பர்க்கு அடித்தொழில் செயல் — குற்றேவல் செய்யும் கீழ்மக்களுக்கு அடிமைத் தொழில் செய்யாதே, ஆகு மாரி என்று ஏத்தேல்—(அருளினும் பொறையினும் கொடையினும் முறையே) காமதேனுவும் பூமியும் மேகமும் (ஆகும்) என்று (அக்கீழ்களைப்) புகழாதே, அகிலமும் ஈன்றும்—(சடாசடப் பிரபஞ்சங்கள்) எல்லாவற்றையும்

பெற்றும், முதிர்வு அல்லா குமாரி தன் — மூப்புப் பருவமில்லாத இளமைப் பருவத்தையுடைய உமாதேவியாரது, பங்கு ஆளன்–பாகத்தை ஆளுகின்றவரும், நீல அரங்கம்–நீலமணிகளாலாகிய நடனசபைகள், எல்லை அல் ஆக்கும்–பகலை இரவாகச் செய்கின்ற, ஆரியம் — பெருமையாகிய, முல்லை பிரான்—திருமுல்லைவாயிலையுடைய கடவுளுமாகிய சிவபிரானுடைய, அடிக்கு அன்பு செய் — திருவடிகளின் பொருட்டுப் பத்திமை செய்வாயாக. (எ–று)

செய்தாற் போகமும் வீடுபேறும் பெற்றுய்யலாம் என்பதுகருத்து. (95)

## இரவுவரல்விலக்கல்.

அன்புடை யாளியங் காக்குறுங் கானத்தி வல்சியெனத்
தன்புடை யாளியங் காக்கு மதர்தனி யெய்தவிவள்
துன்புடை யாளியங் காக்கு மொலிமுல்லைத் தோன்றலதள்
வன்புடை யாளியங் காக்கு மிடறன்ன வல்லிருளே.

(பதவுரை) அன்பு உடை ஆள் இயங்கா — (தம்மிடத்தும்) அன்பில்லாத வேடரும் சஞ்சரியாத, குறும் கான்–அருநெறியையுடைய காட்டிலே, தன்புடை அத்தி–தனது பக்கங்களிலே (செல்லும்) யானைகளை, வல்சி என–உணவென்று நினைத்து, யாளி அங்காக்கும் அதர்–சிங்கம் வாய்திறக்கின்ற வழியிலே, தனி எய்த — (ஆதலால் தலைவரே நீர்) ஏகமாக வர, இவள் துன்புடையாள் — இத்தலைவி துக்கமுடையவளாவாள், இயம் — வாத்தியங்களின் (முழக்கமும்), காக்கும் ஒலி—காவல் செய்தற்கண் உண்டாகின்ற முழக்கமும் உடைய, முல்லைத் தோன்றல்–

திருமுல்லைவாயிலுக்கு முதல்வரும், வன்பு அதள் உடை ஆளி — வலிமையுடைய (புலித்) தோலை வஸ்திரமாகத் தரித்தவரும் ஆகிய சிவபெருமானுடைய, மிடறு அன்ன— கழுத்துப் போல, அல் இருள் அங்கு ஆக்கும்—இரவானது இருளை அவ்விடத்தே செய்யா நிற்கும், (எ—று)

காட்டிலே வழியிலே இரவானது இருளைச் செய்யா நிற்கும். ஆதலால், நீர் வரத் துக்கமுடையவள் ஆவாள் எனக் கூட்டுக. (96)

## கிளவி வேட்டல்.

வல்லியம் போதக வண்டோ டொலிக்கும் வளமுல்லைவாழ்
வல்லியம் போதக மாய்த்த பிரான்வரை மேலிடையோ
வல்லியம் போதக வாம்விழி தாமிந்த வார்முலையோ
வல்லியம் போதக ரக்குழ லாய்திரு வாய்மலர்ந்தே.

(பதவுரை) வல் இயம் — வலிய வாத்தியங்கள், போது அகம் — பூக்களிலுள்ள, வண்டோடு ஒலிக்கும் — வண்டுகளுடன் (ஒரு சமமாக) முழங்குகின்ற, வளம் முல்லை வாழ் — பெருமையாகிய திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற, வல்லியம் போதகம் — (தாருகா வனத்து முனிவர் விடுத்த) புலியையும் யானையையும், மாய்த்த பிரான் வரைமேல் — கொன்ற கடவுளுடைய மலையில் (இருக்கும்), இடை வல்லியோ—இடை கொடியோ, தகவு ஆம் விழி தாம் அம்போ — அருளுடைத்தாகிய கண்கள் பாணங்களோ, இந்த வார் முலை வல்லோ — இந்தக் கச்சணிந்த தனங்கள் சூதாடு கருவிகளோ, ஓ தகரக் குழலாய்—ஓ மயிர்ச்சாந்து பூசிய கூந்தலையுடையாய், திருவாய் மலர்ந்து இயம்பு — (உனது) திருவாய் திறந்து செப்புவாயாக. (எ—று)

மலையிலிருக்கும் கூந்தலையுடையாய்! இடைக்கொடியோ? கண்கள் பாணங்களோ? தனங்கள் சூதாடு கருவிகளோ? செப்புவாயாக எனக் கூட்டுக. (97)

## நிலவு வெளிப்பட வருந்தல்.

வாயானஞ் சக்கர மால்விடை யாவைத்த முல்லைப்பிரான்
வாயானஞ் சக்கர மோதித் தொழாத வறியர்க்கெய்த
வாயானஞ் சக்கர மீதுண வேந்தி மயிலைத்துறை
வாயானஞ் சக்கர வாதழ லாய்வரு மம்புலியே.

(பதவுரை) சக்கரம் மால் விடை — சக்கரப் படையையுடைய விஷ்ணுவாகிய இடபத்தை, வா யானம் ஆ வைத்த — வாவுகின்ற சிவிகையாகக் கொண்டருளிய, முல்லைப்பிரான் — திருமுல்லைவாயிலின்கண் எழுந்தருளியிருக்கின்ற கடவுளே, வாயான் அஞ்சு அக்கரம் ஓதி — வாக்கினாலே பஞ்சாக்கரத்தை உச்சரித்து, தொழாத வறியர்க்கு — வழிபடாத அறிவிலிகளுக்கு, எய்த வாயான் — பொருந்தஅகப்படாதவரே, அ கரம் மீது — அக்கைகளிலே, நஞ்சு உண ஏந்தி — விடத்தை உண்டருளும்படி கொண்டவரே, மயிலை துறைவா — திருமயிலைப் பதியாகிய கடற்றுறையையுடையவரே, யான் அஞ்ச—யான் பயமுறும்படி, அம்புலி கரவாது — சந்திரன் மறைதலின்றி, அழலாய் வரும் — அக்கினி வடிவாக வெளிப்படுவன். (எ—று)

இந்த விந்தை என்னை என்பது எஞ்சி நின்றது. முதலடியில் வாவு எனற்பாலது வா என நின்றது. அன்றி, வாய்மையான் வாயான் என மைவிகுதி தொக்கதாகக் கொண்டு அதற்குச் சற்சொருபரே எனப் பொருள் கூறினும் பொருந்தும். (98)

## அணைந்தவழிப் புலத்தல்.

அம்ப வளவள வாயெனக் கும்முல்லை யாளர்வில்லின்
அம்ப வளவள வாம்விழி யெங்கைக்கு மன்புவைத்த
நம்ப வளவள வாச்சோரி பாலொக்கு நட்பறியாய்
நம்ப வளவள வாவே தகுமிங்கு நண்ணலையே.

(பதவுரை) அம் பவள — அழகிய பவளம்போலும், வள வாய் எனக்கும் — வளப்பமாகிய அதரத்தையுடைய என்னிடத்தும், முல்லை ஆளர் — திருமுல்லைவாயிலை ஆளுகின்றவராகிய சிவபெருமான், வில்லின் அம்பு அவளவு— (கைக்கொண்ட) வில்லிற் (பூட்டிய விஷ்ணுவாகிய) பாணத்தினது அவ்வளவு, அள் அவாம் விழி எங்கைக்கும் — (வஞ்சகம் பொருந்தி) செவி வரையும் நீண்ட கண்களையுடைய என் தங்கையிடத்தும், அன்பு வைத்த நம்ப—(ஒத்தபடியாக) ஆசை கொண்ட தலைவரே, சொரி பால் ஒக்கும் நட்பு—சொரியா நின்ற பால்போல (க்கபடமில்லாத எனது) நண்பினை, அளவளவா அறியாய்—(நீர்) கலந்தும் உணர்கிலிர் போலும், (அங்ஙனமாயின்) அவள் வள் அவாவே — (எங்கையாகிய) அப்பெண்ணினது மிக்க ஆசையே, நம்பத்தகும் — (உமக்கு) நம்பத்தக்கது ஆதலின், இங்கு நண்ணலை — இவ்விடத்தே வாராதிரும். (எ—று)

எனக்கும் என்பது வேற்றுமை மயக்கமாய் மகரவொற்று விரிந்து நின்றது. எங்கைக்கும் என்பது வேற்றுமை மயக்கம். மூன்றுமடியில் அளவளாவா எனற்பாலது அளவளவா எனக்குறுகி உம்மை தொக்கு நின்றது. (99)

நண்ணத் திருவள வானந்த வீட்டி னயந்தெண்ணிடும்
எண்ணத் திருவள கத்திகழ்ந் தேகி யிரும்பரிதி
வெண்ணத் திருவளர் கையேந்தி காணரும் வேந்தனமர்
திண்ணத் திருவள முல்லையிற் சேர்மின் றிருத்தகவே.

(பதவுரை) வள வீட்டின் — பெருமையுடைய வீடு பேற்றின் கண்ணதாகிய, ஆனந்தத் திரு நயந்து — இன்ப வாழ்வை விரும்பி, நண்ண எண்ணிடும் எண்ணத்திர் — சேரும் பொருட்டுக் கருதுகின்ற கருத்தையுடையவர்களே, உவளகத்து இகழ்ந்து ஏகி—(திருக்கைலாசமலையின்கண்) அந்தப்புரத்திலே நிந்தைகூறிப் புகுந்த (மையால் உமாதேவியாரால் சபிக்கப்பட்ட) பிரமனும், இரும் பரிதி வெள் நத்து வளர் — பெரிய சக்கரப் படையையும் வெள்ளிய சங்கையும் உயர்ந்த, இரு கை ஏந்தி காண அரும் — இரண்டு கைகளிற்கொண்ட விஷ்ணுவும் தரிசித்தற்கரிய, திண்ணத்து வேந்தன் அமர் — வலிமையுடைய முதல்வர் எழுந்தருளியிராநின்ற, இரு வளம் முல்லையில் — மிக்க அழகையுடைய திருமுல்லைவாயிலை, திரு தக சேர்மின் — நல்லொழுக்கத்தோடு அடையுங்கள். (எ—று)

எண்ணிய வண்ணம் அச்சிவபிரான் திருவருள் செய்வார் என்பது எஞ்சி நின்றது. ஏகி ஏந்தி என்பன பெயர்கள். காணவரும் என்பது காணரும் என அகரம் விகாரத்தால் தொக்கது. உவளகத்து இகழ்ந்து ஏகி என்பதற்கு அந்தப்புரத்தில் அனுபவிக்கும் சிற்றின்பத்தை வெறுத்துச் சென்று எனப் பொருள் கூறலும் ஒன்று. அதற்கு உவளகத்து அநுபவிக்கும் இன்பத்தை உவளகம் என உபசரித்ததாகக் கொள்க. (100)

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து 'ஸ்ரீ திராவிடமாபாடிய கர்த்தராகிய ஸ்ரீ மாதவச்சிவஞான யோகிகள் அருளிச்செய்த வடதிருமுல்லைவாயிலந்தாதி மூலமும், அவ்வாதீனத்துப் பதினுறாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் அருளுபதேசம் பெற்றவரும் — அவ்வாதீனத்து மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் மாணவரும் ஆகிய மதுரை இராமசாமிபிள்ளை என வழங்கும் ஞானசம்பந்தப்பிள்ளை செய்த உரையும் முற்றியது.

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ மெய்கண்டதேவர் மிளிர்கழல் வாழ்க.

ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள் மலரடிவாழ்க.



உ

# வடதிருமுல்லைவாயிலந்தாதி

# செய்யுள் முதற்குறிப்பகராதி.

—o—

( எண் — செய்யுளெண் )

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## குருமரபுவாழ்த்து.

கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி
காட்டும் வெண்ணெ
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான
பாநு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சி
வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி
தழைக மாதோ.

---

## ஸ்ரீ மாதவச்சிவஞான சுவாமிகள் துதி.

கருணைபொழி திருமுகத்திற் றிருநீற்று நுதலுங்
கண்டாரை வசப்படுத்தக் கனிந்தவா யழகும்
பெருமைதரு துறவோடு பொறையுளத்திற் பொறுத்தே
பிஞ்ஞகனார் மலர்த்தாள்கள் பிரியாத மனமும்
மருவினர்க ளகலாத ஞானமே வடிவாம்
வளர்துறைசைச் சிவஞான மாமுனிவன் மலர்த்தாள்
ஒருபொழுது நீங்காம லெமதுளத்திற் சிரத்தி
லோதிடுநா வினிலென்று முன்னிவைத்தே யுரைப்பாம்.

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ வெங்கடேஸ்வர் பிரஸ், கும்பகோணம்.

உ

சிவமயம்

# ஸ்ரீ மாதவச்சிவஞான சுவாமிகள் துதி

ஓதரிய வாய்மைச் சிவாகமங் கட்கெலா
முற்றபே ராகரமதாய்
ஓங்குதிரு வாவடு துறைப்பதியி லற்புதத்
தொருவடிவு கொண்டருளியே

பேதமுறு சமயவா திகளுள மயக்கைப்
பெயர்க்கும்ரச குளிகையாகிப்
பிரியமுட னேவந் தடுத்தவர்க் கின்பப்
பெருங்கருணை மேருவாகி

ஆதரித் தடியேங்க ளுண்ணத் தெவிட்டாத
வமிர்தசா கரமாகியே
அழகுபோலி கலைசைச் சிதம்பரே சுரரடிக்
கதிமதுர கவிதைமாரி

மாதவர் வழுத்தப் பொழிந்தருளி யென்றுமவர்
மனனிவளர் சந்நிதியிலோர்
மணிவிளக் கெனவளர் **சிவஞான மாதவன்**
மலர்ப்பதம் வணங்குவோமே.

— தொட்டிக்கலை

மதுரகவி — ஸ்ரீ சுப்பிரமணிய முனிவர்